# அருவி

கவிதை இலக்கியக் காலாண்டிதழ்

இரு காலாண்டுகள் இணைந்த இதழ்

தூர்ந்துவிட்ட
ஒரு வார்த்தையொன்றை
மீட்டெடுக்கும் முயற்சியில்
புதைந்து கொண்டிருக்கிறேன்
இன்னொரு
வார்த்தையோடு.

மனதின் அடிவாரத்தில்
திரிந்து கொண்டிருக்கின்றன
அங்குமிங்குமாய்
வேறு வார்த்தைகள்
நுனிப்புல்
மேய்ந்துகொண்டு.

விரிந்து கொண்டேயிருக்கிற
ஆழ்மனத்தேடலில்
ஏதோவொன்றை
இட்டு நிரப்பிச்செல்கிறது
காலத்தின் இடைவெளி.

வார்த்தைகள் வசம்
என்னை
ஒப்படைத்தபின்
வந்து நிற்கும்
அந்த இறுதிப்புள்ளியை
முன்கூட்டியே சந்திக்க
காத்திருக்கிறேன்
முற்றிலும்
மனிதர்களை தவிர்த்து

– காவனூர். ந. சீனிவாசன்

அருவி கவிதை இலக்கியக் காலாண்டிதழ் இதழ் - 24, 25

ஆசிரியர் :
காவனூர். ந. சீனிவாசன்
கைபேசி : 9600898806
aruvisrinivasan@gmail.com

உதவி ஆசிரியர் :
நா. புவனேஸ்வரி, எம்.ஏ.,எம்.பில்.,

அனைத்து தொடர்புக்கு:

அருவி
14, நேரு பஜார்,
திமிரி - 632 512.
ஆற்காடு வட்டம்,
வேலூர் மாவட்டம்.

சந்தா விவரம்
தனி இதழ் : ரூ. 25/-
ஆண்டு சந்தா : ரூ. 100/-

அடுத்த இதழ்:

அக்-நவ-டிசம்பர் - 2015
அனைத்து வடிவக் கவிதைகளுடன்.
படைப்புகள் வந்துசேர
இறுதி நாள் : 31.10.2015

அருவி

தொடர்ந்து உங்கள் ஆதரவினை
நல்கிட வேண்டுகிறோம்.

# நன்றி

முனைவர். ஆலந்தூர். **கோ.மோகனரங்கன்**
**அமுதபாரதி**
**மித்ரா**
**அமரன்**
**நா.விச்வநாதன்**

**ரியாஸ் குரானா**

அனைத்துக் கவிஞர்கள்
கல்லூரிப் பேராசிரியர்கள்
முனைவர்கள்
தமிழ் அறிஞர்கள்
தமிழ் இலக்கிய அமைப்புகள்
தோழமை இதழ்கள்
அனைத்துச் சிற்றிதழ் ஆசிரியர்கள்
குறுஞ்செய்தி இதழ்கள்
ஆண்டு உறுப்பினர்கள்
முகநூல் கவிஞர்கள்
'ஹைக்கூ தோட்டம்'
நண்பர்கள்
மற்றும் வாசகர்கள்

நீங்கள் இப்படித்தான் இயங்கவேண்டும் என்று திட்டத்தோடு யாரும் உங்களைப் படைக்கவில்லை. ஒரு விதை, நிலத்தில் விழுவதுபோல் விழுந்திருக்கிறீர்கள். அது விதையாகவே இருந்து, மடிந்துபோகலாம். அல்லது முளைவிட்டு செடியாகி மடிந்து போகலாம். செடியான பிறகு, மேலும் வளர்ந்து, மரமாகி பூத்து கனி கொடுக்கலாம். எல்லாம் உங்கள் உள்ளே உள்ள சக்தியை, நீங்கள் பரிணமிக்கச் செய்வதில் இருக்கிறது.

– ஓஷோ.

சொற்கள் தனித்தனியே வைத்தாலும் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளும் இடம்தான் கவிதை.

ஒரு இருண்ட நுழைவாயில். ஒன்றோடொன்று பொருந்தாத சில காலணிகள். அதை ரசிக்கும்படி அணிந்து நடக்கும் கலையே கவிதை.

வார்த்தைகள் திறந்த கண்கள். அவை இமைப்பதில்லை. கவிதையில் இருக்கும் சொற்கள் உறங்குவதில்லை.

கவிதை எப்போதும் ஒரு தேர்ந்த திருடரைப்போல மறைவாகவே உலவுகின்றது. துப்பறிவாளரைப்போல நீங்கள் சிந்திக்காதவரை அதை கண்டு பிடிக்கமுடியாது.

– ரியாஸ் குரானா.

● நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!

- அவ்வையார். (புறநானூறு)

நிலமே நீ வாழ்க. நாடாகவோ; காடாகவோ, பள்ளமாகவோ, குன்றாகவோ இருக்கிறாய். எங்கே மனிதர்கள் நல்லவரோ அங்கே நீயும் நல்லதாகிறாய்.

# அருவிக்கரையில்...

இனிய வாசகர்களுக்கு,

நன்றி சொல்ல வார்த்தைகளில்லை. எண்ணற்ற கவிஞர்கள்; எண்ணற்ற கவிதைகள். ஒவ்வொன்றும் தனித்தனி ஆளுமை; எதை விடுவது எதை எடுப்பது என சற்று திணறவைத்துவிட்டது.

கவிஞர்களின் அணிவகுப்பும்; கவிதைகளின் ஆர்ப்பரிப்புமாய் மகிழ்ச்சிக்கடலில் கால் நனைக்கிறது அருவி.

கவிதையும்; கவிதையைச்சார்ந்ததுமான வார்த்தைகளில்தான் எப்போதும் என் சந்திப்பு உங்களோடு.

வார்த்தைகள் கூடி வியூகமைத்துக்கொள்கிறது, நான் கவிதையைவிட்டு வெளியேறாதபடி. தொலைதலும் எழுதலுமாய் என் பயணம் உங்களுக்கு மத்தியில்தான் இப்படி ஒவ்வொரு முறையும் தொடர்கிறது.

அடர்ந்த காடென மாறும் ஒரு வார்த்தைக்குள், நுழைந்து நடக்க நடக்க மிதிபடுகிற உதிர்ந்த சொற்சருகுகளின் சப்தம் உயிரைத் தொட்டுப் போகிறது. கவிதை மொழியின் உன்னத நிலை அதன் அதிநுட்பமே.

தன்னைத் தொகுத்துக்கொள்ளவும், தெளிவாக அடுக்கி முன் வைக்கவும்; கவிதை நிலப்பரப்பில் மீண்டும் மீண்டும் முளைத்தெழவும்; இருத்தலை நிலைப்படுத்தி ஒரு நகர்வை உணர்த்தவும் ஒவ்வொரு சொல்லும் கவிஞனுக்கு கிடைக்கக்கூடிய அபூர்வம் தான். ஆத்மார்த்தமான ஒரு ஆறுதல் தான்.

நீலத்தை நிரப்பி வசிகரிக்கும் வானத்தை எப்போது பார்த்தாலும் பிரமிப்பாயிருக்கிறது. சிறகடிக்கும் பறவைக்கு அந்த வானம் கற்றுத்தந்ததென்ன என்பதை ஊடுருவ, ஊடுருவ உணர்வுகளிலெல்லாம் சிறகுகள் முளைக்கத் துவங்கிவிடுகிறது. வீழும் ஒற்றைச் சிறகும், உதிரும் ஒற்றை இலையும் கவிஞனை வார்த்தையின் விளிம்பு வரை சென்று எட்டிப்பார்க்கச் செய்துவிடுகிறது.

ஒரு பட்டாம்பூச்சியின் சிறகடிப்புதான் எப்போதும் கவிதை எழுதுவதென்பது. எதைப்பற்றிச் சொல்கிறோம், தான் எதுவாகி நிற்கிறோம் என தெரியாத வார்த்தைக் கூட்டங்களுக்கு மத்தியில் ஒரு தொலைதல் நிகழ்தலென்பது அற்புத கணம் தான்.

நவீன பிரக்ஞை வெளியில் சஞ்சரிக்கிற மனம் வரையறைகளையும், வடிவங்களையும் கடந்து, மிகத்துல்லியமாக, கூர்மையாக ஒரு காட்சியை அவதானித்துக்கொண்டு ஒரு லயத்துடன் ரூபப்படுத்தும் நுட்பம் கொண்டது. அது ஒவ்வொரு வார்த்தையாய் திறந்து திறந்து உள்நுழைந்து வெளியேறி புதுப்புது உள்ளீடுகளில் தன்னை நிரப்பிக்கொள்கிறது.

கனத்த அதிர்வுகளையும், சலனங்களையும் நகர்த்த முடியாது காம்பறுந்து விழுகிற சொற்களை தொடுக்கவும் முடியாமல்; கோர்க்கவும் இயலாமல்; நழுவும் கணங்களை இழுத்துப்பிடித்து நிறுத்தவும் இயலாமல்; அடையும் தவிப்பை வார்த்தைகளால் அடுக்கி சொல்லிமாளாது.

மலையின் உச்சியிலும்; அடிவாரத்திலும் ஒரே நேரத்தில் நான் நின்று பார்க்கும் தருணங்களை சிலகணங்கள் எனக்கு கவிதை வழங்கியிருக்கிறது.

வார்த்தையொன்றின் உட்புறத்தையும், வெளிப்புறத்தையும் ஒரே நேரத்தில் என்னால் நுழைந்து தரிசிக்கும் அந்தக் கணங்களில்தான் நான் என்னை விட்டு பலவாறாக பிரிந்து சென்றிருக்கிறேன்.

சொற்கள் நிரம்பிக்கிடக்கும் வாக்கியங்களில் அமர்ந்து இளைப்பாறுகையில் எப்படியாவது ஒரு வார்த்தை என்னை திறந்துவிடுகிறது. அல்லது நான் நுழைவதற்கு ஏதுவாக ஒரு சொல்லில் பாதி கதவு திறக்கப்பட்டிருக்கிறது.

ஒற்றைச்சொல்லை உலுக்க உலுக்க அது எனக்குள் கொட்டிக்கொண்டே இருக்கிறது நீர்த்துப்போகாமல் பலசொற்களை. நான் சரியத்தொடங்கும் நேரங்களில் எல்லாம் என்னை அவைகள்தான் அடுக்கத் துவங்குகிறது. என்னைக் கலைத்துப்போடும் வார்த்தையொன்றில் நான் தொலையத் தொலைய; எடுத்துப்பத்திரப்படுத்தி வைக்கிற ஒவ்வொரு வெற்றுத்தாளிலும் நிரம்பி வழிந்து கொண்டிருக்கிற அரூபக் கவிதைகளை நான் வாசிக்காமல் நகர்ந்ததில்லை.

விளிம்பிலேயே நின்றுவிடுகிற தேடல் ஒரு முற்றுப்புள்ளியின் முழு பரிணாமத்தைக்கூட அறியமுடியாமல் பின்தங்கி விடுகிறது. அவசரப்பட்டு திறக்கிற ஒரு சொல்லிற்குள் பல ரகசிய வழிகள் இருப்பதை யாரும் அறிவதில்லை.

சிந்தனை ரீதியான; மனோவியல் ரீதியான; உணர்ச்சி ரீதியான; ஆத்மார்த்தமான வார்த்தைகளுடன் கடக்கிறபோதுதான் வாழ்க்கை எத்தனை அதிநுட்பங்கள் வாய்ந்தது எனத் தெரியவரும்.

சரியாகப் பேசுகிறோம் என்று கைகளில் உடைந்த வார்த்தைகளை வைத்துக்கொண்டு சபையேறுகிறோம். சொற்களின் ஸ்தூலத்தன்மை பற்றியும்; அவை பிற சொற்களுடன் ஏற்படுத்தும் தொடர்புப்படுத்தல்களையும்; அதன் மௌனத்தவம் பற்றியும் அறிந்து கொள்ளாமலேயே தேடித்தேடி தோல்விகளையே சிலர் சந்தித்து வருகிறார்கள்.

வார்த்தைத்தேடல்கள் அவசியம் என்பதை நிரூபிக்கவே இத்தனை வார்த்தைகளை கொண்டுவந்து சேர்க்க வேண்டியுள்ளது. நாம் உச்சரிக்க உச்சரிக்க; எழுத எழுத வார்த்தைகள் வாழ்ந்து கொண்டுதானிருக்கின்றன.

ஏதோ ஒரு காட்சி; ஏதோ ஒரு சம்பவம் மனத்தின் ஆழத்தில் ஊடுருவி ஒரு கவிதையை மேற்பரப்பில் கொண்டுவந்து சேர்க்கிறது. பிரக்ஞையில் ஒரு ரசவாதம்; ஒரு அதிர்ச்சி; ஆழ்ந்திருக்கும் உள்ளுணர்வில் ஒரு சலனம் ஒரு நல்ல கவிதையை நிகழ்த்திச் செல்கிறது.

மனதின் இயக்கம் பிரபஞ்ச இயக்கத்தின்; இயற்கையின் உட்கூறுகளை சார்ந்து இயங்குவதாக உள்ளது. கவிதை ஆழ்மனதின் இயக்கத்தைச் சார்ந்தது.

கவிதைகளில் எந்த சொல்லும் முக்கியத்துவம் வாய்ந்தவொன்றாக சாத்தியப்பட்டு விடுகிறது.

கவிதையின் தேவைகளும், பயன்பாடுகளும் அது நகரும் போக்குகளும் தன்மைகளும்; வடிவங்களும் அகமும் புறமும்; விவாதங்களும்; விசாரணைகளும்; எதிர்வாதங்களும் தொடர்ந்து கொண்டுதானிருக்கின்றன.

கவிதையின் உள்ளிடங்களை ஆழ்ந்து பார்வையிடும் முயற்சியில்தான் இருக்கிறது கவிஞனின் அடையாளம். கவிஞன் இயங்கியதற்கான அடையாளங்கள் அவன் எழுதுகிற கவிதைகளில்; படைப்பாக்கங்களில் விட்டுச்செல்வதும்; வார்த்தைகளில் தங்கிச் செல்வதும் ஒரு உயிரோட்டத்தை வாசகனுக்குள்ளும் நகர்த்தி போகிறது. அவரவர் எழுதிய கவிதையும் அவரவர்க்கான இருப்பின் அடையாளம்.

அழுத்தமும்; வெளிப்பாடும்; உள் மற்றும் வெளி உலகங்களின் அனுபவங்களை மிகச்சரியாக கவிதைகளில் மனதை கரைத்து கரைத்து வார்த்தை பிரயோகங்களில் கவிஞர்கள் தங்களை இங்கு மாற்றி மாற்றி பிரயோகப்படுத்தியிருக்கிறார்கள்.

ஒரு முனையிலிருந்து இன்னொரு முனைக்கு நகர்வதற்கான வலிமையை வார்த்தைகள் திரட்டிக்கொண்டு இயல்பாக ஏதோ ஒரு வடிவமைப்புடன் வாழ்வின் யதார்த்தங்களை முன்வைத்து நகர்த்தப்பட்டிருக்கிறது ஒவ்வொரு கவிதைகளும்.

'கவிதைகள் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கும்; நிராகரிக்கப்படுவதற்கும் நடுவில் புரிதல்களும் சில கோட்பாடுகளும் வரையறைகளுமிருக்கின்றன' என்ற கோசின்ராவின் கூற்று உண்மைதான்.

எழுத்தை நேசிப்பவர்கள் எதையும் வாசிக்காமல் நகரமாட்டார்கள். வார்த்தைக்குள் நுழைபவர்கள் எவரும் வெறுங்கையோடு வெளிவருவதில்லை.

வாசிக்க நீங்களும் நுழையுங்கள்.

அடுத்த இதழில் சந்திக்கும்வரை என்னைக் கடக்கும் வார்த்தையொன்று நின்றுயோசிக்க, நான் என்ன செய்யவேண்டும் என்ற தேடலில்தான் என் மௌனம் இயங்கிக்கொண்டிருக்கிறது என்பதோடு கலையாமல் நிறுத்திக்கொள்கிறேன் என்னை இங்கு ஒரு முற்றுப்புள்ளியில்.


ஆசிரியர்.

காவனூர். **ந.சீனிவாசன்**

கைபேசி : 9600898806

aruvisrinivasan@gmail.com

## இந்த இதழில் கவிஞர்கள்

| | |
|---|---|
| காவனூர். **ந.சீனிவாசன்** | - 96008 98806 |
| முனைவர். ஆலந்தூர். **கோ.மோகனரங்கன்** | - 93804 17307 |
| முனைவர். கடவூர். **மணிமாறன்**, குளித்தலை. | - 94431 44372 |
| **ரியாஸ் குரானா**, அக்கரைப்பட்டு, இலங்கை. | - +94779256881 |
| **சுந்தர்ஜி ப்ரகாஷ்**, தஞ்சாவூர். | - 94432 27895 |
| **மா.தொல்காப்பியன்**, துரைப்பாக்கம், சென்னை-96. | - 80158 98538 |
| **ஆ.முருகரசு** | - 96888 54990 |
| **கரிகாலன்**, விருத்தாசலம். | - 96008 39939 |
| **யாழி**, கோவை. | - 99763 50636 |
| **ச.துரை**, மண்டபம், ராமநாதபுரம் மாவட்டம். | - 82204 70560 |
| **கணேசகுமாரன்**, நாகப்பட்டிணம். | - |
| **சௌவி**, சின்னபாப்பனூத்து. | - 99449 10073 |
| **மு.மகுடேஸ்வரன்**, உடுமலைப்பேட்டை | - 99766 32795 |
| **அ.செய்தாலி**, துபாய். | - 00971 556317279 |
| **கே.லெயல்.நப்லா**, இலங்கை. | - 94775636189 |
| **ப.கவிதாகுமார்**, மதுரை. | - 94438 56163 |
| **அம்சப்ரியா** | - |
| **மனுஷி**, பாண்டிச்சேரி. | - 87607 11334 |
| **ச.கமலக்கண்ணன்**, பெருங்களத்தூர், திருச்சி-13. | - 98846 75712 |
| **யோகி**, மலேஷியா. | - |
| **ஜெம்சித் ஸமான்**, இலங்கை. | Tel : - 75267487, 758015868 |
| **வலங்கைமான் நூர்தீன்**, திருவாரூர். | - 00971558 282687 |
| **தமிழ்தென்றல்**, திட்டக்குடி. | - 97867 71141 |
| **நிலாபாரதி**, புதுக்கோட்டை. | - 96774 44675 |
| **நந்தன் ஸ்ரீதரன்**, சாலிக்கிராமம், சென்னை-93. | - 98847 44430 |
| **தேனரசன்**, பொள்ளாச்சி. | - 99444 56140 |
| வத்திராயிருப்பு. **தெ.சு.கவுதமன்**, செங்குன்றம். | - 98418 09235 |
| **மௌனஞானி பார்த்திபன்**, இலங்கை. | - 06014651642 |
| **நா.திங்களன்**, ஜோலார்பேட்டை. | - 97918 66109 |
| **அருணா சுந்தரராசன்**, மானாமதுரை. | - 78715 48146 |
| **ரிஷபன்**, திருச்சி. | - 94425 02781 |
| **ஜெயதேவன்**, வத்தலகுண்டு. | - 94869 26886 |
| **என்.பார்த்திபன்**, பிச்சம்பட்டி, **தேனி** மாவட்டம். | - |
| **சிவரமணி**, திரிகோணமலை, **இலங்கை**. | - |
| **பொன்குமார்**, சேலம். | - 90033 44742 |
| **சௌம்யா**, சேலம். | - |

| | |
|---|---|
| **நீதிகாத்தான் பாண்டியன்**, | - 98623 97603 |
| **சுசீந்திரன்**, கொளத்தூர். | - 97916 52091 |
| **ஷக்தி**, திருத்துறைப்பூண்டி. | - 90929 25789 |
| சென்னிமலை. **தண்டபாணி**, ஈரோடு. | - 94435 63649 |
| பேராசிரியர். **இரா.சோதிவாணன்**, சென்னை. | - 91766 56510 |
| **சூரியதாஸ்**, சாலி கிராமம், சென்னை-93. | - 98656 20257 |
| **க.சேவியர் ராஜப்பா**, இராமேஸ்வரம். | - 94434 49899 |
| **கா.ந.கல்யாணசுந்தரம்**, செய்யாறு. | - 94432 59288 |
| **ராஜா சுந்தரராஜன்**, போரூர். | - 94444 55443 |
| **நீத்ரா**. | - |
| **சு.சத்தியவீணா**, ஆர்.ரெட்டிப்பட்டி. | - 96556 91151 |
| வளவன் **கரிகாலன்**, திருநெல்வேலி. | - 99528 82060 |
| **இரா.பூபாலன்**, பொள்ளாச்சி. | - 98422 75662 |
| **ராம்வசந்த்**, ஹைதராபாத். | - 90000 13450 |
| **சொ.சரவணபவா**, திமிரி. | - 95667 00550 |
| **நை.ச.சுரேஷ்குமார்**, கோவை-30. | - 93444 13550 |
| **பூ.அ.இரவீந்திரன்**, இடையர்பாளையம், கோவை. | - 98425 81878 |
| **சுபபாலா**, பிரான்சு. | - |
| **உமாபாரதி**, திருப்பூர் மாவட்டம். | - 94981 25999 |
| **கோ.கலியமூர்த்தி**, திருச்சி-26. | - 97151 85309 |
| **கலைசரன்**, நம்பிவயல், புதுக்கோட்டை. | - 0065-93461584 |
| தக்கலை. **லீலா இராம் (ஆ.ராமலிங்கம்)**, குமரி. | - 99443 34248 |
| உறையூர். **வள்ளி**, பள்ளிக்கரணை, சென்னை-100. | - |
| **நாணற்காடன்**, இராசிபுரம். | - 99427 14307 |
| **சங்கர் சுப்ரமணியன்**, கீழ்க்கட்டளை, சென்னை-117. | - 94453 68529 |
| **கா.அமீர்ஜான்**, திருநின்றவூர். | - 98409 54846 |
| **ச.கோபிநாத்**, சேலம். | - 97902 31240 |
| பேராசிரியர். அதங்கோடு. **அனிஷ்குமார்** | - 94432 80228 |
| **அகிலாதேவி**, அறந்தாங்கி. | - 99523 86224 |
| **சிவா**, பவானிசாகர். | - 09738724445 |
| **ஜெபலீலா**, தூத்துக்குடி. | - 99433 61922 |
| **வைகறை**, புதுக்கோட்டை. | - 96884 17714 |
| **புலவூரான் ரிஷி**, வவுனியா, இலங்கை. | - 94775352209 |
| **பிறைமதி**, சென்னை-77. | - 98435 14251 |
| **மதுமதி சிவரூபன்**, யாழ்ப்பாணம், இலங்கை. | - 00940777959962 |
| **எல்.ப்ரியாகண்ணன்**, அருப்புக்கோட்டை. | - 81240 89199 |

| | |
|---|---|
| **சாயாசுந்தரம்**, மதுரை-16. | - |
| **பாரியன்பன்**, குடியாத்தம். | - 94431 39353 |
| கம்பம். **எம்.பி.புதியவன்** | - 99420 80277 |
| **வாலிதாசன்**, முகவை-15. | - 98948 87705 |
| **மு.கோபிசரபோஜி**, இராமநாதபுரம். | - 98650 60132 |
| **சுமன்**, பாண்டிச்சேரி. | - 95970 38714 |
| **ப.முத்தையன்** (கரிக்கட்டி கவி), நெய்வேலி. | - 94865 80346 |
| **கருமலைப்பழம் நீ**, வியாசர்பாடி, சென்னை-39. | - 94444 50295 |
| **இரா.மதிபாலா**, நங்கநல்லூர். | - 98407 42465 |
| **க.கோபிலெட்சுமி**, தஞ்சை-3. | - 99446 03388 |
| **கவிதைமொழியன்**, மங்கலம், திருப்பூர். | - 74181 53321 |
| **நா.கோகிலன்**, ஜோலார்பேட்டை. | - 90809 09601 |
| **கோ.மகேசன்**, மாத்தூர். | - 91769 61919 |
| **சம்பத் இளங்கோவன்**, சேலம்-8. | - 93621 07553 |
| **ராஜகவி ராகில்**, சீசெல்சு. | - 02248 22874219 |
| **ப்ராங்ளின் குமார்**, மதுரை. | - 90033 90518 |
| வண்ணை **சிவா**, சென்னை. | - 99404 07930 |
| **கவிமுகிலன்**, திருப்பூர். | - 95664 21080 |
| **கு.விநாயகமூர்த்தி** | - 0096898381374 |
| முனைவர். **மித்ரா** | - 98654 16602 |
| வதிலை. **பிரபா** | - 76675 57114 |
| **அமுதபாரதி** | - 98403 80063 |
| தஞ்சாவூர். **ஹரணி** | - |
| **நா.விச்வநாதன்**, அரசூர், தஞ்சை. | - 94433 94614 |
| **யாழ் அகத்தியன்**, லண்டன். | - 0447832901196 |
| **இரதிபாலா**, புலியூர், கரூர். | - 99942 83935 |
| முகவை. **முனீஸ்**, ராமேஸ்வரம். | - 90476 51975 |
| **தனலெட்சுமிபாஸ்கரன்**, திருச்சி. | - 99658 95540 |
| **கவிவளநாடன்**, காரைக்குடி. | - |
| **க.இளையராஜா**, சாத்துக்கூடல். | - 84899 71761 |
| **ம.ரமேஷ்**, முத்துக்குமரன்மலை. | - 98652 24292 |
| **தா.துளசி**, சேலம். | - 95970 31234 |
| **வினையன்**, கங்கைகொண்ட சோழபுரம். | - 87544 48714 |
| **வே.சுப்ரா**, திருநெல்வேலி-11. | - 94423 28085 |
| **சு.கேசவன்**, தொண்டையூர். | - 99438 74595 |
| **வி.தங்கராஜ்**, காஞ்சிபுரம். | - 98948 09812 |

| | | |
|---|---|---|
| **செண்பக ஜெகதீசன்**, நாகர்கோவில். | - | 94439 80220 |
| **சுரேஷ் பவானி**, கீழ்ப்பெரும்பள்ளம், நாகை (மா) | - | 65905 32714 |
| **புதுமை தமிழினி**, கீழடி. | - | |
| **நாகினி**, துபாய். | - | 99942 97296 |
| **யாழிசை மணிவண்ணன்**. மேலப்பட்டு. (சிங்கப்பூர்) | - | 006583859522 |
| ஆர்.**பரஞ்சோதி**. பஞ்சநதிக்குளம் (கிழக்கு) நாகை | - | 006591317164 |
| **அருணாச்சலசிவா**, சென்னை-41. | - | 81241 97898 |
| **சாயிராம்**, தஞ்சை-1. | - | 94433 94625 |
| **ஆர்.எம்.நுஸ்ரி**. இலங்கை. | - | 0094758262518 |
| **வெற்றியன்பு**. ஆயக்காரன்புலம்-4. | - | 72005 11005 |
| **எஸ்.ஆர்.ஹிஷாலி**, வேளச்சேரி, சென்னை. | - | 99940 23810 |
| பட்டியூர். **செந்தில்குமார்**, துபாய். | - | 00971554216786 |
| **புதுயுகா**, பண்ணந்தூர். | - | 95665 80012 |
| **கி.அருள்ஜோசப்ராஜ்**, ஆனைகுப்பம், கடலூர். | - | 98654 80887 |
| **வீரா**, பொள்ளாச்சி. | - | 98941 56377 |
| **ராகவன் தமிழ்**, பள்ளத்தூர். | - | 99943 06536 |
| **எஸ்.நாகலிங்கம்**, தென்னம்பூவயல், தேவகோட்டை | - | 601128558171 |
| **அரவிந்தன்**, வியாசர்பாடி, சென்னை. | - | 98840 51661 |
| கடலூர். **மாரிமுத்து** | - | 94888 04466 |
| பாப்பனப்பட்டு. **வ.முருகன்** | - | 97156 40263 |
| புதுவண்டி. **ரவீந்திரன்**, சோளிங்கர். | - | 90470 11640 |
| **மீரா. மலர்விழி**, கனடா. | - | 01-4168438613 |
| கொள்ளிடம். **காமராஜ்** | - | 98940 58651 |
| **இரா.தயாளன்**, திருவாய்நல்லூர். | - | 97157 82142 |
| **சுபஸ்ரீ சுந்தரம்**, சிங்கப்பூர். | - | +6565038643 |
| கோனூர். **வைரமணி** | - | 99447 19472 |
| **சுசிமாணிக்கம்**, சேலம்-3. | - | 95664 77004 |
| **செ.ச.பிரபு**, நெல்லை-6. | - | 89037 84689 |
| **இராசா.ஆனந்தன்**, (மகிழ்நன் மறைக்காடு) வேதாரண்யம். | - | 99523 31061 |
| **க.இராமஜெயம்**, சத்துவாச்சாரி. | - | |
| **நா.கி.பிரசாத்**, கோவை. | - | 90030 30567 |
| **அமரன்** | - | 96320 99855 |
| **மூர்த்தி கிருஷ்ணன்**, வேலூர்-2. | - | 94433 94806 |
| **சத்தியதாஸ் சக்திவேல்** | - | |
| **விநுராஜி** | - | |
| **அ.முரளி**, துக்காப்பேட்டை. | - | 97918 73456 |

| | |
|---|---|
| **கோவிந்தராஜன் பாலு**, கும்பகோணம். | - 94434 84316 |
| **தீபா செண்பகம்** | - |
| **தி.ஞானபாலன்**, மேற்கு தாம்பரம், சென்னை-45. | - 92831 68278 |
| **அன்பழகன் செந்தில்வேல்**, திருநெல்வேலி. | - 97877 72059 |
| **கண்ணன்சேகர்**, திமிரி. | - 96988 90108 |
| **சி.குருநாத சுந்தரம்** | - |
| **கு.லஷ்மணன்**, கும்பகோணம். | - 98945 06387 |
| **வசந்தராஜா**, நெய்வேலி. | - 94865 79791 |
| **ரா.கி. ராமகிருஷ்ணன்**, சேலம். | - 87603 51970 |
| **இரா.இரவி**, மதுரை. | - 98421 93103 |
| **கவியரசன்**, சென்னை-127. | - 76395 63889 |
| **கூரா.அம்மாசையப்பன்**, சேலம்-30. | - 86081 19295 |
| **குமரகுரு** | - 99406 88612 |
| கன்னிக்கோவில். **இராஜா**. சென்னை. | - 98412 36965 |
| **பல்லவி குமார்**, விருத்தாச்சலம். | - 99423 47079 |
| **இவானா**, திருச்சி-8. | - 94427 40667 |
| **ஷாகுல் ஹமீது**, திருப்பாலைக்குடி, இராமநாதபுரம். | - 00966550684108 |
| **வெற்றிப்பேரொளி**, திருக்குவளை. | - 94422 75418 |
| **அ.ஜெயக்குமார்**, இடைப்பாடி, சேலம். | - 95787 77759 |
| **ந.க.துறைவன்**, சத்துவாச்சாரி, வேலூர். | - 94422 34822 |
| **தனசேகர்**, மாமண்டூர். | - |
| **ஸ்டெல்லா தமிழரசி** | - |
| **சு.சிவராமன்**, நாகூர். | - 94435 88854 |
| **ரேவதிமணி**, வஞ்சூர். | - |
| **மகிவனி**, கோவை-5. | - 99425 19727 |

● இலக்கியத் தளத்தில் கவிஞர் **சுகன்** மறைவும்; இந்திய சரித்திரித்தில் விஞ்ஞானி **அப்துல் கலாம்** அவர்களின் மறைவும் ஈடுசெய்ய முடியாதவைகள். ஒன்றை இழந்தால் தான் இன்னொன்றையும் பெறமுடியும் என்ற மொழி மறுதலித்து ஒன்றை இழந்தால் அது இழந்தது தான் என்பதை நடைமுறையில் இவ்விழப்புகள் நிரூபித்து சென்றிருக்கின்றன.

அருவியின் அஞ்சலிகள்...
- ஆசிரியர்.

● சிறுகுருவி கூடமைக்கப் போரா டும்! ஓர்
சிற்றெறும்பு தான்வாழ ஓடும்! பூவின்
நறுமணத்தேன் நுகர்வதற்கே பறக்கும் வண்டு!
நத்தைகளின் நெடும்பயணம் ஊர்ந்தே செல்லும்!
அருகம்புல் மலைமீதும் முயன்று தோன்றும்
அணில்கூட அசைத்துக்கொண் டிருக்கும் வாலை!
சிறுமைகளின் குடியிருப்பாய் ஆக லாமா!
செந்தமிழை நாம் ஒதுக்கித் திரிய லாமா?

– முனைவர். ஆலந்தூர். **கோ. மோகனரங்கன்.**

● எல்லாரும் சரிநிகராய் வாழு கின்ற
இயல்புநிலை என்றைக்கு மலரும் இங்கே?
நல்லவைக்குக் காலமில்லை என்றே நல்லோர்
நவில்கின்ற போக்கெல்லாம் என்றுமாறும்?
இல்லாதார் எளியவர்கள் செல்வர் என்னும்
இழிவான முரண்பாட்டை இந்த நாட்டில்
இல்லாமல் செய்கின்ற இனியகாலம்
எப்போது மலர்ந்திடுமோ? இயம்பு வீரே!

– முனைவர். கடவூர். **மணிமாறன்**, குளித்தலை.

ஒரு இளம் பெண்
சந்தோசத்தில் தானாக
எழுந்து நடக்கத் தொடங்கினாள்.
அவளுடன் இருந்த
யாருமே கவனித்ததாக தெரியவில்லை.
பாதையின் குறுக்கே
மரத்தின் நிழல்விழுந்து
அவளைத் தடுத்தது.
பின்புறத்தை கைகளால்
தட்டிவிட்டு உட்கார்ந்தாள்.
அவளின் காலடிகள் சில
ஓடிப்போய் ஆற்றில்
நீரருந்திவிட்டு திரும்பின.
மரத்தைப்பார்த்தபடி இருக்கிறாள்.
முகத்தில் ஏதோ மாற்றம்
கிளைகளைப்போல கைகள் அசைந்தன.
ஆடைகள் இலையாக உதிர்ந்தன.
ஒவ்வொரு புன்னகையும்
ஒரு பூ
இது நீடிக்கவில்லை.
திரும்பி வீட்டுக்குள் வந்து
அனைவருடனும் அமர்ந்துகொண்டாள்.
முகத்தை மாற்றினாள்
அழத் தொடங்கினாள்
எல்லோரும் ஆறுதல் சொன்னார்கள்.
கடைசியாக அவள்
வீட்டைவிட்டு ஓடிப்போகும்போது
சந்தோசமாக இருப்பது
ஏன் பிடிப்பதில்லை என
எழுதி வைத்திருந்தாள்...

**ரியாஸ் குரானா,**
அக்கரைப்பட்டு, இலங்கை.

**சுந்தர்ஜி பிரகாஷ்.**
தஞ்சாவூர்.

● ஒரு இறகின் சுமைபோல்
உன் கூந்தல் சுமக்கும்
இந்த ஒற்றை மஞ்சள் மலரின்
சுமை அத்தனை எளிதாயில்லை
இத்தனை நேரம் உனக்காக நான்
எழுதியெழுதி அழித்த
சொற்களின் சுமை.

என்றாலும் அந்தமலர்
ஒரு நத்தை சுமக்கும் ஓடுபோல்
என்னை வசீகரித்தது முதலில்.

நத்தைக்கு தன் கூடுபோல்
உனக்கு உன் மலர்.
அதை என்போல
ஒருபோதும் உன்னால்
பார்க்க இயலாது
எனும் துயர் வதைக்க

நாமெல்லாம் தூக்கிச்சுமக்கும்
நிழலும் ஒரு கரிய மலர்தானோ
என்று குழம்பியபடி
இறக்கி வைக்கிறேன்
தூக்கிச் சுமந்த சொற்களை.

**மா.தொல்காப்பியன்.**
துரைப்பாக்கம், சென்னை.

ஒரு கவிதையை கவிதை என்றதற்கா
நான்
கண்டிக்கப்படுகிறேன்.

ஒரு கவிதை
உன்னைத் திரும்பிப் பார்க்காதபோதும்
நீ ஏன்
ஒரு கவிதையை உச்சரிக்கிறாய்
என்கிறார்கள்.

ஒரு கவிதை
ஒரு கருடனின் குடிசைக்கு குடிபெயர்ந்தபோதும்
நீ ஏன்
ஒரு கவிதையை தேடி அலைகிறாய்
என்கிறார்கள்.

ஒரு கவிதை
உன் எதிரியைக் கொண்டாடும் போதும்
நீ ஏன்
ஒரு கவிதையை தழுவி நினைக்கிறாய்
என்கிறார்கள்.

ஒரு கவிதை
உன்னை தனிஅறையில் சிறைபிடித்தபோதும்
நீ ஏன்
ஒரு கவிதைப் பெருவெளியில்
தேடுகிறாய் என்கிறார்கள்.

ஒரு கவிதை
உனது பார்வைகளை பிடுங்கிக்கொண்டபோதும்
நீ ஏன்
ஒரு கவிதைக்காக உன் மனக்கண்களை
திறக்கிறாய் என்கிறார்கள்.

ஒரு கவிதை
உனது பாதங்களை இடறிவிட்டபோதும்
நீ தான்
ஒரு கவிதை வாசனை வேண்டி
மூக்கை நீட்டுகிறாய் என்கிறார்கள்.

ஒரு கவிதை
ஒரு ஓட்டைப்படகை உனக்கு பரிசளித்தபோதும்
நீ ஏன்
ஒரு கவிதைக்காக சமுத்திரத்தின் ஆழம்நோக்கிப்
பாய்கிறாய் என்கிறார்கள்.

எனது பதில் இதுதான்
ஏனெனில்
ஏனெனில்
ஏனெனில்
அது ஒரு கவிதையாய் இருக்கிறது
என்பதால்...

ஆ.முருகரசு

- நீங்கள் மன்னிக்கமாட்டீர்கள்.

பள்ளிக்கு
தாமதமாய் வரும் மாணவனை;
நெரிசலில் சிக்கி
நேரம் தவறும் ஊழியனை;
மணலில் விளையாடும்
குழந்தையை;
பள்ளித்தேர்வில்
தோற்றுப்போகும் மாணவர்களை;
காதலிக்கும்
உங்கள் மகளை;
சாட்சியை பயன்படுத்தி
குற்றவாளியாய் மாற்றப்படும் நிரபராதியை;
நீங்கள் மன்னிக்கமாட்டீர்கள்.
ஒருமுறை
மன்னித்துப்பாருங்கள்
நீங்களும் கடவுளாகலாம்...

**கரிகாலன்,**
விருத்தாசலம்.

● நான் ஒரு வழிப்போக்கன்
மலைகளை, ஆறுகளை
பூங்காக்களை கடந்து வந்திருக்கிறேன்.

சாக்கடைகளை, முட்காடுகளை
குப்பைமேடுகளைத் தாண்டி
வந்திருக்கிறேன்.

குள்ளமானவர்களை
எய்ட்ஸ் நோயாளிகளை
மாற்றுத் திறனாளிகளை
மூன்றாம் பாலினத்தோரை
ஊடுருவி வந்திருக்கிறேன்.

அரசியல்வாதிகளை, வியாபாரிகளை
திருடர்களை
ஒதுங்கி வந்திருக்கிறேன்.

அழகிகளை, யுவதிகளை
மாடல்களை
விலகி வந்திருக்கிறேன்.

சாமி வலம் வருவதை
பிண ஊர்வலத்தை
மெழுகுவர்த்தி பயணத்தை
பார்த்து வந்திருக்கிறேன்.

பகல், இரவு
பனி, மழை
புயல்
மீண்டு வந்திருக்கிறேன்.

கடவுளை, பிசாசை
ரத்தக்காட்டேரிகளை
எதிர்கொண்டு வந்திருக்கிறேன்.

இதில் கசப்பில்லை
வருத்தமில்லை
உவப்பில்லை, வலியில்லை
கண்ணீரில்லை, காதலில்லை.

நான் ஒரு வழிப்போக்கன்
என் கையிலிருப்பது
ஒரு பிச்சைப்பாத்திரம்
அவ்வளவு தான்...

**யாழி**

● சிரித்துக் கொண்டிருக்கிறார்கள்
பொருந்தாத கிரீடத்தை
தன் சிரசில்
சூடியிருப்பவனைப் பார்த்து.

கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்
தன் சிரசுக்கு பொருந்தவில்லையென
கிரிடத்தை தூக்கியெறிந்தவனை.

ரசித்துக் கொண்டிருக்கிறேன்
தன் சிரசின் அளவுக்கேற்றவாறு
கிரிடத்தை தயார்செய்பவனை.

யோசித்துக்கொண்டிருக்கிறேன்
சிரசுக்கு அவசியம் தானா
கிரிடமென்று.





ச. துரை,
மண்டபம், ராமநாதபுரம் மாவட்டம்.

● ஒரு பாதி கருப்பு போர்த்தியும்
மறுபாதி வெள்ளி போர்த்தியும்
இருக்கிறது வானம்.

கருப்புக்கும் வெள்ளிக்கும்
இடையில்
நான்.
பாதி மழையோடும்
பாதி வெயிலோடும்
நின்று கொண்டிருக்கிறேன்.

யாராவது எனக்கு
பாதி சூடாகவும் மீதி குளிராகவும்
ஒருசேர இந்த காலநிலைக்கு
ஏற்ற கவிதைபானம் தரலாம்.

அந்த கவிதைபானம்
பாதி எதார்த்தத்தோடும்
மீதி கற்பனையோடும்
இருக்கவேண்டும்.

அந்த கவிதை தருபவர்
பாதி மனிதனாகவும் மீதி மிருகமாகவும்
வெளிப்படவேண்டும்.

அந்தக் கவிதையின் நாக்கு
பாதி என்னையும்
மீதி உங்களையும் இரக்கமின்றி
சுவைக்கவேண்டும்.

அப்படி கிடைத்தால் ஒருபாதி
நானாகவும்
மறுபாதி நீங்களாகவும்
இந்தக் கால நிலையில்
பறக்க இறக்கை கிடைக்கலாம்..

**கணேசகுமாரன்**

- எனக்குள் முடிந்த ஒரு பழைய கனவு
இருக்கிறது.
என்னால் கிழிந்த ஒரு புகைப்படம்
இருக்கிறது.
என்னைத் துவட்டிய ஒரு பழைய மழை
இருக்கிறது.
எல்லாம் துடைத்துவிட்ட ஒரு பழைய
ஆறுதல் இருக்கிறது.
என்னைக் கொன்றுபோன ஒரு பழைய நட்பு
இருக்கிறது.
அப்படியே இருக்கிறது.
எதையும் எதுவும் செய்ய முடியவில்லை.
நானும் இருக்கிறேன்.

**சௌவி.**
**சின்னபாப்பனூத்து.**

- காலம் உங்களுக்கான தண்டனைகளை
நிறைவேற்ற
தேதி குறித்துக் காத்திருக்கிறது.

செய்தவற்றையெல்லாம்
தவறுகளென்ற
இலக்கணத்திலிருந்து ஒதுக்கி
உங்களை நீங்கள்
சமாதானப்படுத்திக்கொள்கிறீர்கள்.

உங்கள் சமாதானங்கள்
காலத்திடம்
செல்லுபடியாகப்போவதில்லை.

நீங்கள் நொறுக்கிய இதயங்களின்
தெறித்துக் கிடக்கும்
சில்லுகளின் மீதுதான்
உயர்ரக தோல் காலணிகளணிந்து
கண்டுகொள்ளாமல்
நடந்தபடியிருக்கிறீர்கள்.

நீங்கள் உங்களுக்கென
கவசங்களென நம்பிச்
சேர்த்துக் கொண்டிருப்பவையெல்லாம்
காலத்தின் கைகளில்
நாளை கத்திகளாய் மாறும்
உங்களைக் குத்திக்கிழிப்பதற்கே.

காலம்
தேதிகுறித்துக் காத்திருக்கிறது.

நிதானமாகவே
உங்கள் தவறுகளைத் தொடருங்கள்.

**மகுடேஸ்வரன்.மு.**
உடுமலைப்பேட்டை.

● கவிதையின் இறுதிச் சொல்போல்
பெருங்கூட்டத்தின் கடைசியில்
அமர்ந்திருக்கிறேன்.

முதற்சொல்போல்
யாவரும் அறிய அமர்ந்திருக்கும்
உன்னைச் சொல்லிடை வெளிவழியே
எட்டி எட்டிப் பார்க்கிறேன்.

ஒன்றும் தெரியவில்லை.

உன்னில் தொடங்கிய பொருள்
என்னில் முழுமையடைகிறதே
அது போதும்.

முற்றுப்புள்ளியை ஏற்கிறேன்.

அ.செய்தாலி,
துபாய்.

● முற்றத்தில்
என்நிழல் விழுந்த கனம்
நீங்கள் முகம் சுழித்திருந்தால்
வாசலோடு திரும்பியிருப்பேன்.

நீங்கள்
புன்னகைசூடி நின்று கொண்டிருந்தீர்கள்.

ஒரு குவளை தேநீருக்குபதிலாய்
நன்கு காய்ச்சிய பாலை
உபசரிதத்ர்கள்.

ஒரு உத்வேகத்துடன் பருகினேன்
நீங்கள்
புன்னகை சூடி எதிரே அமர்ந்திருந்தீர்கள்.

சற்றுநேர
உரையாடலுக்குப்பின் நகர்ந்தேன்.
அப்போதும்
புன்னகைசூடி வழியனுப்பிவைத்தீர்கள்.

இப்போதுநான்
வீதியின் இடைவெளியில் சுயமிழந்துகிடக்கிறேன்
நீங்கள்
விஷம் கலந்த பால்குவளையை
நன்றாக கழுவிக்கொண்டிருப்பீர்கள்.

உடலுக்குள் சுடர்விடும் உயிரை
மெல்ல அசைத்துக் கொண்டிருக்கிறது
நீங்கள் பிரியத்தோடு சொட்டி இறக்கிய விஷம்.

பதட்டமின்றி கடக்கிறது ஒருசில பாதங்கள்
ஏதோ
சில வீதி மிருகங்கள்
மோப்பமிட்டுக் கொண்டிருக்கின்றன
நீங்கள்
நீண்டபொறுமையோடு
அவசரம் பார்த்து இருந்திருக்கிறீர்கள்

நான் எந்தக் கலகலப்புமின்றி
கொல்லப்பட்டுவிட்டேன்.

**கே.யெல்.நப்லா,**
**இலங்கை.**

- எப்போதும் வீட்டினுள்ளேயே இருக்கும்
அவளை
இன்று வீதிவரை அழைத்துச்சென்றேன்.
திடீரெனப் பெய்த மழையில்
கடல்கன்னியாகிப் போனாள்.
பாதையில் கூட்டம் கூடிப் பேசியதில்
அவளைக்
கடலில் விடுவதாய்
முடிவு செய்யப்பட்டது.
தனிமையில் காத்திருக்கும்
அந்த வீட்டுக்கு
நான் என்ன பதிலுரைப்பேன்?

**ப.கவிதா குமார்,**
**மதுரை.**

● உதிர்தல் மூலம்
அறிகிறோம் வாழ்தலை.

நமக்கான முகத்தை
யாரிடமோ
தேடிக்கொண்டிருக்கிறோம்.

வலிகளைக்கடக்க
வழி
வலியோடு கடப்பதுதான்.

விலக மறுக்கும்
நிழலிடம் கோபித்துக்கொள்ள
முடியவில்லை.

வாலறுந்த பட்டங்களை
வானம்
ஒருபோதும் வெறுப்பதில்லை

ப்ரியங்களை
பதியமிட்டு வைத்திருக்கிறேன்
பூப்பது
நெருஞ்சியாகக்கூட இருக்கலாம்...

**அம்சப்ரியா**

● நேற்று என்னிடம்தான்
இருந்தது என்வீதி
என் உறக்கம் கெடுக்க வந்ததாக என்
இருளை
கைது செய்தார்கள்.

என்னை மூழ்கடிக்க
சதிசெய்வதாக
என் ஆற்றை நாடுகடத்தினார்கள்.

எனக்கெதிராக
ஆள் சேர்ப்பதாக
என் வனங்களை
சாம்பலாக்கினார்கள்.

எனக்கு என்றுதான்
தீர்மானிக்கப்படுகிறது
எல்லா வஞ்சகங்களுடன்...

**மனுஷி,**
பாண்டிச்சேரி.

● சபிக்கப்பட்ட தேவதையின் நாட்குறிப்பில்
சிறகுமுளைத்த வார்த்தைகள் இருந்தன.

உறைந்துபோன கண்ணீர்துளிகள்
வெம்மை மாறாமல்
தளும்பிக் கொண்டிருந்தன.

அதீதக் காதலைச் சுமந்தலையும்
அவளது பயணக்குறிப்புகள்
பௌர்ணமி வெளிச்சத்தில் மின்னின.

அவளது நாட்குறிப்பில் இருந்து
பிடுங்கப்பட்ட சொற்கள்
அடர்வனத்தில் வாசம் வீசிக்கொண்டிருந்தன.

குழந்தையின் முத்தத்தையும்
கோபத்தையும் கூட
அற்புதப் புதையலைப்போல
சுமக்கும் நாட்குறிப்பின் தாள்கள்
காலக்கரையான்களால் அழிக்கப்படாதவாறு
நினைவுகளால் எழுதப்பட்டிருந்தன.

உங்கள் கைகளில் அந்த நாட்குறிப்பு
கிடைக்கும் நாளில்
மனக்கிளர்ச்சியோடு நீங்கள் வாசிக்கத்
தொடங்கலாம்.

வாசித்து முடிக்கையில்
நீங்கள் புத்தனாகக்கூடும்.

ச. கமலக்கண்ணன்,
பெருங்களத்தூர், திருச்சி.

● பசித்த வயிற்றின் மீதான
உங்கள் கருணை
டீக்கடை வாசலில்
படுத்துக்கிடக்கலாம்.

நீங்கள் அளிக்க மறுக்கும்
சுதந்திரம்
கூண்டுக் கம்பிகளுக்குள்
அடைந்து கிடக்கலாம்.

உங்களுக்குள் மூழ்கிக்கிடக்கும்
மூடநம்பிக்கை
வெளியேற வழியின்றி
கண்ணாடித் தொட்டிக்குள்
நீந்திக் கிடக்கலாம்.

எதற்கும்
கொஞ்சம் கவனமாயிருங்கள்
விலங்கிலிருந்து வித்யாசப்படுத்தும்
மனிதம்,
உங்களை விட்டு
விலகிக் கூட
சென்றிருக்கலாம்...

**யோகி,**
மலேசியா.

- வரைபவனின் மனைவியை
வரைபவனின் மனைவி என்றே
வரையறுக்கிறார்கள்.

அதைத்தவிர வேறு அடையாளங்கள்
அவளுக்கு வழங்கப்படுவதில்லை.
வரைபவனின் மனைவி
கவிதை வரைகிறாள்
நடனம் ஆடுகிறாள்
பாடல் இசைக்கிறாள்
உணவு சமைக்கிறாள்
புதிர் போடுகிறாள்
நூதமான சில விஷயங்களை
அசாட்டையாக செய்கிறாள்.

இருந்தபோதிலும்
வரைபவனின் மனைவியாகவே
அவள் அறியப்படுகிறாள்.
தன் அடையாளத்தை குறித்து அவள்
சிலசமயம் அமைதி இழக்கிறாள்.

வரைபவனின் தூரிகைகள்
பாம்பாய், புழுவாய், புல்லாய், மண்ணாய்போக
கனவு காண்கிறாள்
வர்ணங்கள் வர்ணம் இழக்க சாபமிட்டு
கனவை கலைக்கிறாள்

வரைபவனின் மனைவி
அடையாளம் என்ற
ஒன்றுக்கு அடையாளம் என்பதைத்தவிர
வேறென்ன இருக்கிறது
என்று குறிப்பு எழுதிவைத்து
உணர்ச்சியற்ற நாட்களை நகர்த்துகிறாள்.

நான் இன்னும் வரைபவனின்
மனைவியாகவே இருக்கிறேன்...

**ஜெம்சித் ஸமான்,**
இலங்கை.

● எனக்குள் ஒரு மரம் வளர்கிறது.
காற்று வீசும்போதெல்லாம்
அதன் இலைகள்
எனக்கு வெளியே உதிர்கின்றன.

அதனை
வேறுஒரு காற்று
உருட்டி விளையாடுகிறது.

அதை
எனது கனவுகளில் ஒன்றாய்
நினைத்து
உதிர்ந்த கிளையிலேயே
ஒட்டிவிடும் முனைப்பில்
புத்தனைப்போல
நானும் தோற்றுக்கொண்டிருக்கிறேன்.

ஒத்த இயல்புகள்
ஒன்றையொன்று தள்ளுகின்றன

இனி வானம் விடிவதை
நிறுத்தி வைக்கவேண்டும்.

**வலங்கைமான் நூர்தீன்,**
திருவாரூர்.

● குறவைகளும், கெளுத்திகளும்
கெண்டைகளும், விரால்களும்
துள்ளிக்குதித்து நீந்திக்கொண்டிருந்த குளம்.

கிராமத்திலிருந்து நகரமாகிக்கொண்டிருந்த
அவ்வூரின் கழிவுநீர் சேமிப்பு தொட்டியாகி
பலவருடங்களுக்கு முன்பே
நோய் தொற்றுகளால் அழிந்துவிட்டன
மீன்களும் நீர்வாழ் உயிர்களும்.

படிப்படியாக நெகிழி குப்பைகளால்
நிரப்பப்பட்டு
அரசியலால் ஆக்கிரமிக்கப்பட்ட
அவ்விடத்தில்தான் உயர்ந்து நிற்கிறது
பல தளங்களை கொண்ட அடுக்ககம்.

பத்தாவது தளத்தில் பளிங்கு தரையோடு
சொகுசாக கட்டப்பட்டுள்ளது
நீலநிறத்தில் நீச்சல்குளம்.

சருமநோய்களை உண்டாக்கக்கூடிய
ரசாயன கலவை தண்ணீரில்
பெரும் கட்டணம் செலுத்தி
மீன்களைப்போலவே
நீந்திக்கொண்டிருக்கிறார்கள் மனிதர்கள்.

**தமிழ் தென்றல்,**
திட்டக்குடி.

- வருந்துகிறேன்
காகிதப்பூவை
கசக்கி
எரியாமல்
விட்டதற்கு.
வலிக்கின்றது
வண்ணத்துப்பூச்சியின்
ஏமாற்றம்.

நிலாபாரதி.
புதுக்கோட்டை.

● நிழல் தேடியே
நிதம் உன்காலடி அமர்கிறேன்
நெடுமரமான நீ
நெடுநெடுவென சாய்கிறாய்
நிலையறியாமல்.

வாழையிலையிலேயே தங்கிவிட
வழிதேடி வந்திறங்கி
இடைநில்லாமல்
தவறிப்போய் தரைநோக்கி
நழுவிச்செல்லும்
பேரிடியாய்...

உன் காதலும் கோபமும்
ஆழமாய் உள்ளிறங்கி
ஆள்கின்றன என்னை.

ஒவ்வொரு வார்த்தையிலும்
ஓசையில்லா அணுகுண்டை
வீசிச்செல்கிறாய்.

வெடித்துப் போவதென்னவோ
நான் மட்டுமே.

போர்த்தொடுக்கிறாய்
பூவனத்தின் மேல்
நசுக்கும் கால்களும்
நாசியும் உணர்வதில்லை
கருகியே அருகிப்போகும்
பூ மணத்தின் வாசந்தனை.

ஆயுதமே வேண்டாமென்கிறேன்
ஆயத்தமாகிறாய்
அணுகுண்டு வீசுவதற்கும்...

**நந்தன் ஸ்ரீதரன்,**
சாலிக்கிராமம், சென்னை–93.

● நீ தேய்த்து திருப்பியனுப்பிய
விளக்கில்
பூதமே இல்லை நண்பா.

நான்செலுத்திய பணம்
என் குடிசையின் இருளை விலக்க
ஒரேயொரு திரியுள்ள சிறுவிளக்குக்கு

உன் சொற்களின் வலிமையினாலேயே
இந்த அற்புத விளக்கை
வாங்க ஒப்புக்கொண்டேன்.

பூதமற்ற இவ்விளக்கு
திரியிட்டாலும்
எரிய மறுக்கிறது.

என் வாழ்நாள் சேமிப்பை
நீ கவர்ந்து சென்றதில் எனக்கு
புகாரேதுமில்லை.

குறைந்தபட்சம் இவ்விளக்கை
இருளில் எரியவைத்துத் தா.

**தேனரசன்,**
பொள்ளாச்சி.

● அந்தரங்க மிருகங்களின்
ஓயாத பெருந்தொல்லை
உள் மனக்காடுகளில்...

அதிகார முறுக்கில் செருக்கித்தருக்கும்
ஆணவத் திமிரின்
சிம்ம கர்ச்சனைகள்.

உறக்கத்திலும் விழிகளில்
செந்தீயின் அலைபுரளும்
கடுங்கோபத்துப் புலி உறுமல்கள்

கண்ணவியப் பண்ணுகிற
காமவெறி யருவருப்புக்
கரடிக் கூப்பாடுகள்.

ஒருபோதும் நிறைவின்றித்
திரியவிடும் பேராசை
ஓநாயக் கூப்பாடுகள்.

நாட்பட்டது என்று நாணாது
அடுத்ததன் மிச்சம் புசித்து
வயிறு வளர்க்கும் சுயநல
நரி ஊளைகள்.

மூளை வறண்ட மூடநம்பிக்கை
முரட்டுக் காட்டெருமை
மூர்க்கத் தாக்குதல்கள்
என்று ஒரே அழிச்சாட்டியங்கள்
உள்ளே...

மௌனஞானிபார்த்திபன்,
இலங்கை.

● என் அழுகையின் முழுமையை
புத்தனின் அலமாரியில்
மறைக்கப் பார்க்கிறேன்.

சாளரம் வழியே எனது விரல்களுக்கு
சமத்துவம் ஊற்றப்பட்டுக்கொண்டே
இருக்கிறது.

அறைக்குள் இருள்மட்டுமே
ஒளிந்திருக்கிறது
எப்போதும் போல் இப்போதும்
ஒளியை எங்ஙனம் நான்தேட

வாழ்வு அக்கனமே தீர்ந்துபோகலாம்
அல்லது யாருக்காகவோ
கைமாற்றப்படலாம்
அத்தேடலின் முடிவிலே யார்கண்டது
அதுகூட முழுமையான
வாழ்வாயிருக்கலாம்...

வத்திராயிருப்பு. **தெ.சு.கவுதமன்,**
**செங்குன்றம்.**

● வீட்டருகே வாதாம் மரத்தில்
கூடொன்று கட்டியது காகம்
வீட்டுக் கடனுக்காக
அலைந்ததைப் போலவே
எங்கெங்கோ அலைந்து திரிந்து
ஏதோவொரு குச்சியோ
சருகோ
அலகினில் சுமந்துவந்து கட்டியது.

அடுத்த உயரக்கிளைகளில்
அடுத்தடுத்த மாடிகள்
உயர்த்தியிருக்கலாம் தான்.

பறக்கத்தெரிந்த அதற்கு
ஏனோ
உயரத்தின் மீது ஆர்வமேயில்லை.

**நா. திங்களன்,**
ஜோலார்பேட்டை.

● பூத்துச் சருகாவதைபோல்
அத்தனை எளிதானதல்ல
முள்ளாய் இருப்பது.

ஒற்றைப் புன்னகையிலும்
தனிமை குமுறல்களிலும்
கடந்துவிட முடிவதில்லை.

மன்னிப்புகள்
தண்டனைபோல் எளிதாய்
முடிந்துவிடுவதில்லை

பாதியில் மிச்சம்
வைத்திருக்கும் கவிதைபோல்
குறுகுறுத்துக் கொண்டுதானிருக்கிறது
குற்றம்செய்த நெஞ்சு.

**அருணா சுந்தரராசன்,**
**மானாமதுரை.**

● இரவுகளில்
பெற்றுக்கொள்ளும் முத்தங்களை
அதிகாலை புறப்பாட்டில்
மறந்துபோகிறாய்.

சிணுங்கல்களின்
முணுமுணுப்பை மாத்திரம்
ஒளித்துவைக்கிறாய்
தலையணையின் கீழ்.

காதல் தரும் நீ
காமமும் உணர்த்துகிறாய்

இரண்டையும்
கவிதையில் சொட்டாமல்
காரிருள் சூழ் எரிமலைக்குளத்தில்
கைவிட்டுப்போகச் சொல்கிறாய்

கன்னங்களின் புன்னகையை
கண்களின் ஒளியாக்குகிறாய்
மலர்சூடும் கணங்களில்
விரல்களை முறிக்கிறாய்

நாணற்ற தனிமையில்
உனதாக்கிக் கொள்கிறாய்
என் போர்வையினை
உன் நினைவுகளிலிருந்து
விலக்கிவைக்கும் கண்ணாமூச்சியால்
நானும் ஆகிப்போகிறேன்
தேசம் இழந்த அகதியென.

**ரிஷபன்,**
திருச்சி.

● ஆதி வனம்
ஒரே மரத்துடன்
தானிருந்தது.

ஒடித்துப்போன
கிளைகளில் பெரும்
வனமானது.

துளிர்க்கத்துளிர்க்கக்
கத்தரித்துக் கொண்டேயிருந்தவர்களுக்கு
மேலும் மேலும்
கைகள் முளைத்தன.

தழும்பேறிய மரத்தை
நிராகரித்து நகரும்
உனக்குப்புரியாது
அதன் வலி.

**ஜெயதேவன்,**
வத்தலக்குண்டு.

- வெற்றிலைக்கான சுண்ணாம்பை
நிர்ணயிக்கும் விரல்கள்.
மரத்தின் வளையங்களில் ஆயுள்
கணிப்பான் தச்சன்.
சுவரைத்தட்டி வீட்டின் வயசு சொல்வான்
கொத்தன்.
உரசிப் பாராமல் கூட
உன்மைத்தங்கம் உணர்வான்
பொற்கொல்லன்.
எல்லா அறியப்படும் அறிவுக்கும்
வசப்படாமல்
மாரீச மானாய் வாழ்க்கை.

**பார்த்திபன்,**
பிச்சம்பட்டி, தேனி மாவட்டம்.

● இறைந்துகிடந்த முத்தங்களை
ஒவ்வொன்றாய் பொறுக்கி எடுத்தாய்.
இடக்கையால் துடைத்தெடுத்தாய்
இதழோர முத்தத்தின் சிறுதீற்றலை.
மாடிப்படியோரம் தந்தமுத்தம்
எங்கோ ஒளிந்து கொண்டிருந்தது.
பின்காதோரம் விழுந்தமுத்தம்
விரல்பட்டுக் கூசி நழுவியது.
கைநிறைய அள்ளினாய் கட்டிலுக்கடியில்.
மொட்டை மாடியில் இட்டமுத்தத்தை
கருநீலச் சிறுகுருவிகளின்
கொத்தலுக்கு விட்டுவிட்டாய்.
ஆழத்தின் ஆழத்தில் மறைந்துகிடக்கிறது
உன் கணவன் பார்த்த முத்தம்.

**சிவரமணி,**
திரிகோணமலை, இலங்கை.

● கூட்டிய நிலத்திலும்
துகள்களாய்
குப்பை.

கழுவிய மேகம்
கலந்திடும் கடல்
உப்பு.

அமிழ்ந்திடும் ஆழியில்
ஆழ்கடல்
சிப்பி.

திறந்திடும் சிப்பியில்
விலையில்லா
முத்து.

கனவுத்தோட்டத்தில்
ஆயிரம் பூக்கள்.

பூத்ததும் வாடுமோ
பூமாலை
வந்ததும் கலையுமோ
கனவு.

பூட்டிய இதயமாய்
நீ
மனவெளி தனிமையில்
நான்.

பொன்.குமார்,
சேலம்.

● முழுமையாக
புரிந்துகொள்வதற்குள்
முடிந்துவிடுகிறது வாழ்க்கை.

ஊர் இருக்கிறது
வீதி இருக்கிறது
வீடு இருக்கிறது
சுற்றம் இருக்கிறது
சொந்தம் இருக்கிறது
எல்லாம் இருந்தும்
தனிமைப்படுத்தப்பட்டதாக
உணர்கிறது மனம்.

வாழ்க்கைப் பாதையெங்கும்
வைக்கப்பட்டுள்ளன
கன்னி வெடிகள்
கவனமாகவே
எடுத்து வைக்கவேண்டியுள்ளது
காலடிகள்.

கணம்
ஒவ்வொன்றும் கனம்.

வாழ்க்கை
ஒரு நீர்க்குமிழி.

**சௌம்யா,**
சேலம்.

- என் மௌனத்தின் மீதமர்ந்தது
உன் வெண்நிறச் சொற்கள்.
அப்போது
செழித்து அடர்ந்த சிறகுகளால்
தேவதையானேன்.
என்னோடு மேலெழும்பிப் பறக்க
எத்தனிக்கிறது
என் நிலம்.

**நீதிகாத்தான் பாண்டியன்**

- நள்ளிரவில்
யாருமற்ற தெருவில்
தனித்து தீவிரமாக
பேசிக்கொண்டிருக்கிறான்
மிதமாக மதுஅருந்தியவன்.

**சுசீந்திரன்,**
கொளத்தூர்.

● அந்த
பனைமர காட்டுக்கு
அந்தப்புரமென்றும் பேருண்டு.
அங்கு
கொஞ்சம் நாய்களும்
அதிகவிடமுள்ள
பாம்புகளும் வசித்தன.

இடம் பெயர்ந்த வலிமைகள்
யோசித்து நிற்கையில்
காய்ச்சும் கருப்புபனைவெல்லப் பாகின்மணம்
காடெல்லாம் அழைத்து
கலவரம் செய்தது.

அதுவரை
அந்த கருப்பு மரத்தின் இலைகள்
அமைதியாகி மழைவரும் நாட்களுக்காய்
மௌனித்தன வானத்தை நோக்கி
நெருஞ்சிகளும்
தன் முட்களை நீட்சியாக்கி.

பேசப்பட்ட
புதர்களுக்கு அப்பாலும்
ஈசல்கள் கூடிநின்று பேசி
இந்த மரணத்தை
இன்னொரு நாளைக்கு
தள்ளி வைத்தன.

தொடர்ச்சியாய்
மழையும் தன் பயணத்தை
மறுதேதி குறிப்பிடாமல்
ஒத்தி வைத்தது.

ஷக்தி,
திருத்துறைப்பூண்டி.

● தடாகத்தில் அவசரமாய் வெளியேறும்
பறவைபோல்
களவாடி பறக்கிறாய் கனாக்களை.

ஆழி நிறைக்கும் நீரின் நிறைக்கு அணுவும்
குறைவில்லாத
காதலோடு தவிக்கும் இரவுகளில்
அடர்வெண்மையேறிய பூக்கள்
ஒளிர்கின்றன.

இன்றைய கவிதைக்கான பாடுபொருள்
கிட்டியதாய்
வேகவேகமாய் நானெழுதும்
தருணத்திலே தான்
வெளிப்படுகிறாய் நீ.

தீயின் நடுவே பதறிக் கடக்கும் காற்றாய்
மறந்துபோய்விடும் கண்டதும்
உயிரெழுத்துக்கள்.

ஒவ்வொருமுறை இசைக்கையிலும்
சலிக்காத குழலினிசையாய்

அறுதியிட்டு கூறவியலாத உன் மாயைகள்
விளங்கவோ நிறைவாகவோ
இருக்க வாய்ப்பில்லை மேகங்களுக்கு.

**சென்னிமலை. தண்டபாணி,**
ஈரோடு.

● வழிதவறி வந்த பட்டாம்பூச்சியின்
வண்ணங்களுக்குள்
நழுவிவிழுந்து வெளிவந்த பொழுது
சிறகுகள் முளைத்திருந்தன
எனக்கு.

அதில் ஒட்டிக்கொண்டிருந்த
வண்ணங்களோடு நான்
சிறகு விரித்த தருணம்
நட்சத்திரங்கள் இடம் பெயர்ந்து
வழிவிட்டன.

ஒற்றை மழைத்துளியின் தொடுகைக்குள்
தொலைந்து
நான் வெளிவந்த தருணம்
அடைமழை தொடங்கியது எனக்குள்.

பூவின் நறுமணம்
எனக்குள்
வட்டமிட வைத்தன வண்டுகளை.
அவற்றின் பாடல்களில்
நாத அலைகளின் நடனம்.
காலைப் பொன்னிறச் சூரியனின் புன்னகைக்கு
என் நன்றிகளை
பவுர்ணமிகளாய் மலர்த்தி வைத்தேன்.

ஓடைகளின் ரகசியங்களை
நான் உற்றுக்கேட்டபொழுது
விடையறியாத எத்தனையோ வினாக்களின்மீது
விழுந்தது வெளிச்சம்.

கரையோர நண்டுகள்
பதித்துச் சென்ற சுவடுகளில்
நான் கால்பதித்தபோது
வாழ்வின் தொடரோட்டம்
மூச்சிறைத்துக் கொண்டிருந்தது.

எது என் அடையாளம் என்றறியும்முன்
ஒவ்வொன்றிலிருந்தும் நான்
உருமாறி வெளிவந்தேன்
சுயம் கழுவப்பட்டு
காணாமல்போகாமல்...

**பேராசிரியர். இரா.சோதிவாணன்,**
சென்னை.

● ஐந்தில்
ஒரு பூதத்தின்
அடிவயிற்றின் கீழே
கற்படுக்கைச் சுழற்சி.

அதன்
இயற்கை இலக்கணத்தில்
சிலநேரம்
புணர்ச்சிப் பிழைகள்.

பிரிவின் உராய்வுப் பிசிறுகள்.

அதனால்
பூதத்தின் மேனியில்
சிலிர்ப்புச் சிதறல்கள்.
கிழிசல் கிளைகள்.
விரிசல் கணவாய்கள்.
மேல் கீழ்ப் புதையல்கள்.

உயர்திணை உயிர்களுக்கு
அஃறிணை அரண்மனைகளும்
இடிபட்டுக் கல்லறை கட்டும்
கடுங்கொடுமைகள்.

இயற்கைப் பேரிடரின்
கறுப்பு வரலாற்றில்
கண்ணீர்ப் பக்கங்கள்...

**சூரியதாஸ்,**
**சாலிகிராமம், சென்னை–93.**

● அரளி விதைகள்
காய்த்துக் குலுங்குகின்றன
யூகலிப்டஸ் மரங்களில்.

கரகரத்த சப்தங்கள்
ஒழுகி வழிகின்றன
குயில்களின் குரல்வளைகளிலிருந்து

தனிமையின் சிராய்ப்புகளால்
காய்ப்புக் கட்டியிருக்கின்றன
உயிர் முடிச்சுகள்

ஆப்பிளில் பங்குதர மறுத்துவிட
ஏவாள் குறித்த துக்கத்தில்
பித்தாகி அலைகிறான் ஆதாம்.

சட்டைக்குள் புகுந்து இம்சிக்கும்
சூரைக்காற்றின் ஆவேசத்தில்
பின்னுக்கு இழுக்கப்படுகின்றன
முன்னோக்கிய கால்கள்

கிளைகளை நிர்வாணமாக்கி
வேர்களைப் போர்த்திக்கிடக்கும்
இலைக்கந்தல்

பாங்களில் பசி தீர்க்கும்
பூச்சிகளின் ஒட்டுறவில்
வெளிறிச் சுருங்குகிறது இதயம்

தூரத்துப் பசுமைகளில்
விழிகள் நடக்க
கால்கள் வெடிப்புற்று
பிளக்கின்றன கந்தக பூமியாய்.

**க.சேவியர் ராஜப்பா,**
இராமேஸ்வரம்.

● ஆயுள் முழுக்கத் தேடியும்
அது எனக்கு
மீண்டும் வாய்க்கப் பெறவில்லை.

பாலின வேற்றுமை கடந்து
வெற்றுடம்போடு
தோட்டத்து நீர்த்தொட்டியில்
குதியாட்டம் போட்டதும்,

சோளத்தட்டை குருத்தொடித்து
கரும்பெனக் கடித்ததும்

விடியல் தாண்டி
தலையணை அரவணைப்பில்
ஒன்றித் தூங்கியதும்,

பேதங்கள் கடந்து
கிராமத்து வெள்ளந்தியாய்
வீதிகளில் திரிந்ததும்,
இனி ஆயுள் முழுக்க
வாய்க்கப் பெறாத வசந்தங்கள்.

**கா.ந.கல்யாணசுந்தரம்,**
செய்யாறு.

● தொடுவானத்தை தரிசிக்க
இனிய பயணமாய்
பிறந்த கிராமம் நோக்கி.
ஒற்றுமையின் சின்னமாய்
அதோ
அந்த அந்திவானத்து
பறவைகள்.

நெஞ்சில்
நீங்கா நிழலோவியமாய்
ஏரிக்கரைமீது
வீடு திரும்பும்
உழவனின் குடும்பம்.

இன்னும்
தலைச்சுமைகளை மட்டுமே
இறக்கி வைக்கின்றனர்
என புலம்பும்
சுமைதாங்கி.

மஞ்சள் வெயிலில்
சாதிமதபேதமின்றி விளையாடி
களைப்புறும் சிறுவ சிறுமியர்.

தமிழர்தம் கலாச்சார அனுபவங்களை
பகிர்ந்துகொள்ளும்
பாரம்பரிய வீட்டுத் திண்ணைகள்.

அறுவடை நாட்களில்
போரடித்து தூற்றும்
நெல்மணி களஞ்சியத்து
கதாநாயகனாய் களத்துமேட்டு
காளைகள்.

எப்போதும் விட்டுக்கொடுக்கும்
பண்புதனை வளர்க்கும்
வயற்காட்டு ஒற்றையடிப்பாதைகள்

பசுமை நினைவுகளை
பொய்யாக்கி
இவையாவும் கனவுலகத்து
கதையாகிப்போனது
நகரப் பேருந்திலிருந்து
இறங்கி நடக்கையில்...

ராஜா சுந்தரராஜன்,
போரூர்.

● காலையில்
இந்த வீட்டு நிழல்
அந்தவீட்டில் விழுந்து வடிந்தது
மாலையில், அந்த வீட்டு நிழல்
இந்த வீட்டில் படர்ந்து கவிந்தது.
மதியத்தில், ஒரு பருந்தின் நிழல்
குறுக்கே பாய்ந்தது.
ஒளியா, உருவா,
நிழல் செய்வதெது?
இரவில், தியானித்து நின்ற
தெருவிளக்குகளின் ஒளி தெளிவுகண்டு
ஒரு பூனை மிதந்து.
இருட்டின் ஓசைகளுக்கு இன்று
கீழடங்கிக் கிடக்கிற பாட்டிக்கு
பருவத்தின் கங்குல் புலர்வதற்கு
கிணற்றடி நிழல் போதுமாயிருந்தது.
உள்ளதெல்லாம் இருள் தான்.
கட்டடக் காட்டின் விளிம்பில் தவ்வி
நிழல் துண்டாட வருகிறது
முக்காடிட்ட நிலா.

**நீத்ரா**

● எரியும் இரவொன்றில் விசும்பல்களைக்
கேட்க மறுத்து
தலையணையோடு புதைத்த செவிகளின்
ஈரம் அறிவாயா?

இல்லாத தீக்குச்சியின் உரசலோடு
தொடங்கும் சிறுபொறி
உச்சியைப் பிடித்தாட்டும் பேயின் சாயலில்
பரவ
அன்றைய நிலவில் நிச்சயமாகக் களங்கம்
தென்பட்டது.

அதனை
அம்மாவின் அகன்ற மச்சத்தோடு
ஒப்பிட்டுக் கூறுவதை நீங்கள் இகழலாம்.

இவ்வேதனையின் ஆணிவேர்
உன் இதழ்களாகத் தோன்றும் நிமிடங்களில்
மறுமுறை முத்தங்களை எதிர்பார்ப்பதை
எந்த வரிசையில் இணைப்பது?

அமானுஷ்யக் குரல்களை அடையாளம்
தெரிகிறது
அதில் இப்போது அச்சம் இல்லை
பாதச்சுவடுகள் அழுக்காய் இருப்பதில்லையென
அவன் அடிக்கடி சொல்வான்
நீர் வீழ்ச்சியைப் போல் குதித்து
துளித்துளியாய்ப் பரவ எனக்கும் பிடிக்கும்.

அகங்காரம் நிறைந்த வரிகளை
எழுதுவதைக் காட்டிலும்
வாசிக்கும்போது
முட்டைக்குள் காத்திருக்கும் சிறுபறவையின்
எதிர்பார்ப்புகளோடு தொடர்கிறேன்.

வௌவ்வால்கள் அடைந்த ஆதி
மரமொன்றின்
அழுகிய இலைகளின் ஈரவாசனையை
தேடித்திரியும் இவ்விரவினைப் பற்றி
இன்னும் எழுதிக்கொண்டே போகலாம்...

**சு. சத்தியவீணா,**
ஆர்.ரெட்டியபட்டி.

● சில காலம் முன்புவரை
மச்சு வீடு
ஓட்டு வீடு
கூரை வீடு
அணிவகுத்து நின்ற கிராமம்
மனித மனங்களால்
பாசம் தாங்கி நின்றது.

புலம் பெயர்ந்த மனிதர்கள்
திரும்பாதுபோக...
சிதிலமான வீடுகள்
நிஜம் தொலைத்து
காட்சிப்பொருட்களாகி கிடக்கின்றன
எதிர்கால தலைமுறைக்கு.

**வளவன் கரிகாலன்,**
திருநெல்வேலி.

● எங்கோ
மழையடித்த செய்தியில்
தூரலின் தெறிப்புகள் எனக்குள்.

சின்னஞ்சிறுகுழந்தையுடன் பேருந்தில் ஏறிவிட்ட
பயணிக்கு இடநெருக்கடியிலும் எழுந்து
இடம் கொடுத்தவருக்கு
மானசீகமாய்க் கைகுலுக்குகிறது
என் மனசு.

இடுப்பிலிருந்தபடியே
தாயின் தொடைகளில் கொலுசணிந்த
பஞ்சுக் கால்களைத் தட்டித்தட்டி
சந்தோஷிக்கும் குழந்தை
கொண்டுவரும் குதூகலம்.

பின்னிரவு நேரங்களில்
மரத்திலிருந்து ஒவ்வொன்றாய் உதிர்ந்து
மண்ணை மூடிக் கிடக்கும்
பவழ மல்லிகளும் நந்தியாவட்டைகளும்.

காலைப்பனியில்
காற்றோடு கலந்து வீசும்
பக்கத்து வீட்டு
பன்னீர்ப் பூக்களின் வாசம்.

நேரம் நிறைந்த பால்யகாலங்களில்
மூழ்கடித்து நெகிழ்ச்சியூட்டுகிறது
அந்தப்பள்ளிக்கூட மரங்களும்
மயூர நாத சுவாமி கோவிலும்.

ரணங்களையும் ரசிக்கச்செய்யும்
நல்ல சில அனுபவங்கள்.

கவிதைகளை சுவாசிக்கத்தெரிந்த
நல்ல சினேகிதங்கள்.

என் சுவர்க்கம்
பூமியில் இருக்கிறது...

**இரா. பூபாலன்,**
பொள்ளாச்சி.

- பச்சை நிற விஷமெனப்
பரவி விட்டிருக்கிறது
அடர்தாவரம்
குளத்தின் மீது.

நேற்றுவரை
தெரிந்த வானம்
குளத்து நீரில்
இன்று இல்லை.

ஆகாயத் தாமரையின்
மேலமர்ந்து
உறுமீன்களுக்குக் காத்திருந்த
வெண் கொக்குகள்
ஏமாறிப் பறந்தன.

கழிவுகளைக்
கலப்பவனுக்கும்
கூடுதல் வசதி இது.

அதனினும் அதிகம்
வலிப்பது
நேற்றுவரை
இக்கரையில் மீன் பிடித்தவன்
அக்கரைக்குப் போய்விட்டான்.

ராம்வசந்த்,
ஹைதராபாத்.

● ஆதிதிராவிடர் என்றுதான்
உங்கள் சுவரொட்டிகள்
என்னை கௌரப்படுத்துகின்றன.

இப்போது இந்து என்ற
மகுடத்தையும் சூட்டுகிறீர்கள்.
சரி..
நீங்கள் பின்னர் கொடுக்கும்
ராஜேந்திரனின் வாளோ
கோட்சேவின் துப்பாக்கியோ
ஏதோ ஒன்றை எடுத்து
உங்கள் எதிரியை
நான் முடித்துவிடுவேன்.

முடித்தவுடன்
என்னை உங்கள் தலைவனாக
ஏற்றுக்கொள்வீர்களா?

அல்லது
உங்கள் எதிரி
என்னை முடித்துவிட்டால்
உங்கள் சுடுகாட்டில்
என்னை புதைப்பீர்களா?

சொ. சரவணபவா,
திமிரி.

● வெவ்வேறு நேரங்களில்
வெவ்வேறு வண்ணங்கள்
ஆனாலும்
வானம் ஒன்றுதான்.

வண்ணங்களின்
வகைகளுக்கேற்ப
ஒதுக்கப்படவில்லை இடங்கள்.

வண்ணங்கள்
ஒன்றுடன் ஒன்று குழைந்து
காதலிக்கின்றன
அண்டவெளியில்

அவ்வப்போது
உங்கள் மந்தையிலிருந்து
இரண்டு ஆடுகள்
சரியான பாதையில்
சென்றுவிடுகின்றன

ஆடுகளைத்தேடி
அலைகின்றன
வகைவகையான அரிவாள்கள்.

இறந்துவிட்டதாய்
நம்பப்பட்ட காதல்
தன்னை வெட்டிய அரிவாளைத்
தகித்து
உருக்கி ஊற்றியபடி
உதயமாகிறது காலையில்
ஒவ்வொரு நாளும்.

நை.ச.சுரேஷ்குமார்,
கோவை–30.

● நுழைந்த பின்னரே தெரியவந்தது
நான்
இன்னொருவர் கனவிலிருக்கிறேனென்று..
நாகரீகம் கருதியாவது
வெளியில் வந்திருக்கவேண்டும்
விரும்புகிற வேறு சிலரும்
அங்கே உலவியதால்
ஏனோ
வேடிக்கை பார்த்தபடியே நின்றுவிட்டேன்
ஆடல் பாடல்களாய்
கேளிக்கை கோலாகலங்களாய்
குதூகலம் வழியும்
வண்ணச் சுவையிருந்தபடியினால்
விடியும் வரையிலும்
விழிகள் அடைத்தேயிருந்தேன்.
எப்போதும் போலவே
நடைப்பயிற்சியில் எதிர்பட்ட
அவரது முறுவலில் துளிர்த்த
மர்மத்தில் உணர்ந்தேன்
நுழைந்தது அவர் கனவிலென்று
மர்மத்தின் முடிச்சு அவிழ்கையிலோ
என் கனவில் அல்லவா
அவர் இருந்தாரென்ற
ஏளனமே மிச்சமிருந்தது..

**பூ.அ. இரவீந்திரன்,**
இடையர்பாளையம், கோவை.

● நடைபாதைகளிலும்
குறுகிய மற்றும் அகன்ற
சாலைத் தடங்களிலும்
மௌனத்தின் மொழிப்பெயர்ப்பாகக் கிடக்கும்
குருதித் திட்டுகள்.

விலகிச் செல்லுதல் இயலாத
ஒற்றை வழியில்
திணறிக்கொண்டுள்ளது
பயணம்.

சந்தையின் பெருங்கூச்சலில்
காலை மிதிக்கும் நெரிசலில்
தொலைந்து போனது
விழிகளற்ற எனது கைப்பொருள்.

உருக்கி வார்த்த தராசுகளில்
நிறுக்கப்படுகின்றன
விலைபேசப்பட்ட நியாயங்கள்.

கிடங்குகளில் குவிக்கப்பட்ட தானியங்களில்
முப்போகம் முளைவிடுகிறது
பசி.

ஆவின் பாலை ஊற்றித்
தலைகுனிந்து கும்பிட்டபோது
நன்றாக வளர்கிறது
கரையான் புற்று.

பாழடைந்த மண்டபத்தின்
வௌவ்வால்களைப் போன்று
தலைகீழாகத் தொங்கிக் கொண்டுள்ளது
வாழ்க்கை.

**சுபபாலா,**
பிரான்சு.

● மரணம் இன்றோ நாளையோ
அல்லது
என்றோ நடந்தேயாகும்.
அதைப்பற்றி
ஒரு கணமும் கவலையில்லை
என்கையில் அந்த கடைசி நொடியிலும்
ஒரு கவிதை பூக்குமானால்

அழகான கவிதைகளை
மரணம்
அவசரப்பட்டு விரும்பும் என்கிறார்கள்
நான் இன்னும் அதை எழுதவில்லைபோல்.

நித்திரையில்தான் மரணம்
என்னை கைதுசெய்யுமானால்
மரணம்
என்னிடம் தோற்றேபோகும்.

நித்திரை கொள்வதுபோல்
நித்திரையையே ஏமாற்றியவன்
நான்.

அழகான மரணமே
என்னை எடுத்து செல்லும்போது
ஒரு தடவை உற்றுப்பார்.

நான் எழுதாத கோடி கவிதைகளின்
அதிசயம்
என் உயிருக்குள் கிடந்து குதியாய்
உடைத்து வெளிதள்ளும்

ஏனோ தெரியவில்லை
இன்று உன் ஞாபகம் வந்தது.

## உமாபாரதி

● யுத்தத்திற்குப் பின்னான
போர்க்களமாய்
காட்சியளிக்கிறது
நிராகரித்தலுக்கு
ஆட்பட்ட அத்தருணம்.

ரத்த சகதிக்குள் முகிழ்க்கும்
என்
கண்ணீரில் இருக்க வாய்ப்பில்லை
கரிப்பின் சுவை.

நான்
வெள்ளைக் கொடிபிடித்தும்
ஒன்றும் ஆகப்போவதில்லை.
இப்போது
வரலாறென பதிந்துவிட்ட
அப்போரில்...

கோ.கலியமூர்த்தி,
திருச்சி–26.

● வேட்டுகள் ஒலித்த வனங்களிலிருந்து
வெளியேறிற்று
பறவைகளின் கூட்டிசை.

பிரம்மாண்ட ஆலயங்களின் கீழ்
நசுங்கிப் புதைந்தன
நாங்கள் வணங்கிய நடுகற்கள்.

அருவிகளைக்குடித்தன அணைகள்.

நதிகளை பாட்டில்கள்
வசந்தத்தை உண்டுவிரிந்தது
சருகுகளின் பாலை.

கம்பும் திணையும் மறந்த நிலங்களிலிருந்து
வெளியேறிற்று கிளிக்கூட்டம்.

பஞ்சதந்திரக் கதைகளின்
மிருகங்களும் பறவைகளும்
புழங்கிய வெளிகளில்
சக்திமானும் வெளவால் மனிதனும்,

குழந்தைகளின் புத்தகங்களில்
மயிலிறகுக்குப் பதிலாக
துப்பாக்கிகள்

பிச்சையெடுக்கும் யானைகள்
சோற்றுக்கலையும் மயில்கள்
பாலிதீன் கோளமாய் பூமி

கோபத்தில் கொதிக்கும்
சூரியனின் பார்வையில்
உருகி மறையும் பனிமலைகள்
நீள்கிறது.

கடல்கொண்ட நகரங்களின் பட்டியல்
மூழ்கி மறைகிறது
மீண்டும் ஒரு வரலாறு.

**கலையரசன்,**
நம்பிவயல்.

● நீங்களும் நானும்
பொதுவானதொரு ஒப்பந்தத்தில்
கையெழுத்திட்டிருக்கிறோம்
அகப்படும் பலியாடொன்றை
ஆளுக்குப் பாதியாய்
பங்கிட்டுக் கொள்வதென்றும்
மீதமிருக்கும் எச்சங்களை
மேய்ச்சல் காரனுக்கும்
எல்லைக் காளிக்கும்
தந்துவிடுவதென
நீளும்
அவ்வொப்பந்தத்தின் நகலை
ஆளுக்கொன்றாய்
பத்திரப்படுத்திக்கொண்டு
பலியாடாகப் போகும்
அந்த
ஒப்பந்தத்தில் பங்குபெறாத
மூன்றாமவரின் வருகைக்காய்
காத்துக்கொண்டிருக்கிறோம்.

**ராமலிங்கம்,** குமரி.

● அந்தக்கடலின் வயதைத்
தோராயமாய் ஆராய
கடலின்
கரையொட்டிய கல்மண்டபத்தூணில்
உடலோடு
ஒரு கால்சாய்த்து
காலை தொட்டே
மதிப்பிடுகிறேன்
சிவந்த சூரியனை சாட்சிவைத்து.

தெறிக்கும் உப்புநீர்க்கரிப்பும்
பகையும்
என் தோளொட்டின.

வயதுக்கணக்கெடுப்பின்போது
வானமும், இயற்கையும்
தத்தம் உத்தேச வயதோடு
முன்வந்து பண்ணின இடைஞ்சல்.

தொடுவான் தொடங்கி
கரைக்கு இழுத்தடிக்கப்படும்
அலையின் விவேகமற்ற வேகத்தில்
மனமும் உடன்சென்று திரும்பின.

ஆதியந்தமில்லா கடலின்
வயது கணக்கிடல் பிரயத்தன
கடல் மைல் கணிப்பு போலன்றி
கடலலை எண்ணுதல்போல
வீணாகிப்போனது
அல்லது வீணெனப்புரிந்தது
சொற்ப காலத்திலேயே.

தலைமுறை பலகண்ட
சமுத்திரம் விட்டு
இப்போது
சாமான்யன்
என் வயதைக் கணக்கிடமுயல்கிறேன்
வாழும் நாளில்
எடுத்த மறுப்பிறவிகளைக் கணிதப்படுத்தி
ஒரு தோராயமாய் தான்...

**உறையூர். வள்ளி,**
பள்ளிக்கரணை, சென்னை–100.

● தொலைத்தபின்
தேடுவதே
பிழைப்பாகிவிட்டது.
என் அகராதியின் பக்கங்கள்
என்றும் நிரம்பிவழிகிறது
கோபம், தாபம்
அன்பின் பிரிவுகளினால்.
சாபமொன்றே
விதியென்றானபின்
கிடைக்கப்பெறும்
வரங்களால்
ஆகப்போவதொன்றுமில்லை.

**நாணற்காடன்,**
இராசிபுரம்.

● என் செத்துப்போன சொல்லொன்று
ஆற்றின் முதுகின்மேல்
பயணித்துக்கொண்டிருக்கிறது.
உங்கள் வசதிப்படி
அந்த ஆற்றுக்குப் பெயர் சூட்டிக் கொள்ளுங்கள்
அல்லது
உங்களின் பேராதரவுபெற்ற
ஜோசியக்காரன்
குறித்துதரும் எழுத்துக்களில் ஒன்றைத்
தெரிவுசெய்து
முதலெழுத்தாக்கி
பெயர் சூட்டிக்கொள்ளுங்கள்
ங, ஞா, மௌ இப்படியான எழுத்துக்களை
அவன் குறித்துத் தரமாட்டான் என்பது
குறித்த குரைப்பொலி
உங்கள் செவிகளை வந்தடையட்டும்
ஜோசியக்காரனுக்கும்,
செத்துப்போன சொல்லுக்குமிடையில் இப்போது
நீங்கள் தொங்கிக்கொண்டிருக்கிறீர்கள்
என் சொல்லை
அதன் கழுத்தை
யாரோ நெறித்துக் கொன்றிருக்கிறார்கள்
என்பதை
உங்களின் கவனத்திற்குக் கொணர்கிறேன்
உங்களூர் காவல் நிலையத்தின்
உறங்காத இரவுகளின்மேல்
நிம்மதியாக நீங்கள்
உறங்கிக் கொண்டிருக்கிறீர்கள்
லத்தி முளைத்த உங்கள் கனவிலிருந்து
நீங்கள் வெடித்துச் சிதறுகிறீர்கள்
இப்போது
என் செத்துப்போன சொல்
கரையொதுங்கிவிட்டது.
இடது காலையா, வலது காலையா...?
ஆற்றின் நுனியில்
எதை முதலில் எடுத்துவைப்பதென
யோசித்துக் கொண்டிருக்கிறேன்
நான்.

**சங்கர் சுப்ரமணியன்,**
கீழ்க்கட்டளை., சென்னை—117.

● இப்படியாய் இல்லை
முந்தைய கணம்.

தினமும் மூச்சுகளில்
இதயம் நிரம்பி
கொதிக்கிறாய்.

நனையும் தூரல்களில்
உன் ஞாபகம்
நிறைந்து வழிகிறது

உடம்பின் கனம் குறைந்து
கால்கள் தரை பாவாமல்
காற்றில் மிதக்கும்
இப்போதைய கணம்.

கா. அமீர்ஜான்,
திருநின்றவூர்.

● தொடர்வதில் தெரியுமோ
பயணிகளுக்கும் பாதைகளுக்கும்
வலிக்குமென்று...?

அதனதன் வலி
அததற்கு பெரிதானதென்று
அறியுமோ
அச்சுறுத்திப் பிரதானப்படுத்தும்
நிகழ்வுகளுக்கு...?

மேட்டிற்கும் பள்ளத்திற்குமான
வேறுபாட்டின் விருப்பங்களில்
வீழ்ந்து
எழ முடியாமலும்
ஏற முடியாமலும்
நிகழ்வதிலிருந்து தொடர்கிறது
விடுபட முடியாத அவலம்...

தொடர்வதில்
துவண்டுக் களைத்தாலும்
விடுவதில்லை நிர்பந்தம்
இளைப்பாற...?

நறுமணமும்
தீய்ந்த நாற்றமும்
சேர்ந்தே சுவாசிக்க நேருகிறது
காற்றில் பறக்கும்
அவலும் உமியுமாக

பதறாகியும் பறக்கிறார்கள்
இன்னும்
ஒருவரை ஒருவர் மதித்தபடி
பிடிக்க முயல்கிறார்கள் வாழ்க்கையை...

எனினும்
முடிந்தபாடில்லை பாதைகளும்
பயணிகளும்...

**ச.கோபிநாத்,**
**சேலம்.**

● உதடுகளின் வழியே
புன்னகையை பூக்கச் செய்து
மனப்பரப்பெங்கும்
வஞ்சக வேர்களை ஊன்றி
வலியூட்ட முயன்றபடி
துயரின் அனைத்து திசைகளிலும்
தூக்கிவீசத் திட்டமிடும்
சூட்சும சூறாவளிகளால்
சுழன்றடிக்கப்படினும்
மனதுள் துளிர்விடும்
நம்பிக்கையின் ஒற்றைஇலை
வேர்விடச் செய்கிறது
வாழ்வெனும் மரத்தை.

**பேராசிரியர். அதங்கோடு. அனிஷ்குமார்.**

- என்னை
உங்களுக்குப் பிடிக்காது
உங்களுக்குப் பிடிப்பது போல்
நானில்லை.
நீங்கள்
மூக்கணாங்கயிறோடு
அலைகிறீர்கள்.
நான் நுகத்தடிக்கு தப்பி ஓடுகிறேன்.
நீங்கள்
வார்த்தைகள் சேர்த்து
அணை கட்டுகிறீர்கள்.

மௌனத்தின் விசையால்
அணை உடைத்து வியாபிக்கிறேன்.

உயரும் குரல்கள்
உங்களுடையவை
குரல்களை நடுங்கவைக்கும் பார்வைகள்
என்னுடையவை.

உயிர் குடிக்கும்
துரோகங்கள் உங்களுடையவை.

புன்னகையின் பெருவெளியில்
துரோகம் புதைத்து கடக்கும்
கால்கள் என்னுடையவை.

வீட்டுத் தோட்டத்தில்
பூத்த முதல் பூவின்மேல்
மையல் கொள்ளும் உங்களுக்கு
காட்டுப் பூக்கள் மேல்
காதல் ஏற்படாதிருப்பதில்
ஆச்சரியமேதுமில்லை.

**அகிலாதேவி,**
அறந்தாங்கி.

● வெறுமை உருகி
தகதகத்து அணைத்திடுகிறது
இருண்மை பொழுதுகளை.

தன்னிலை மீளும்
தருணங்களில் யாவும்
விழிநீரில்
திரை மறைக்கிறது.

அகத்தின் கூச்சல் அதிரச்செய்கிறது
பெருகும் நுண்ணிய உணர்வுகள்
தேங்கி வியாபிக்கிறது என்
வெளியெங்கும்.

பொங்கிடும் சினத்தின்
துயரமதை
துடைத்திடும் எழிலாய் மிளிரும்
சிறுமுறுவல் ஒன்று.

ஆழிக்கும் செறிந்திருக்கும்
அடர்வனத்திற்கும்
இடையே
விரிந்த சுடும் மணலென
கிடக்கிறது வாழ்க்கை.

**சிவா,**
பவானிசாகர்.

● நெடுவானில் பறந்தோடிய
என் ஆசைக் கனவுள்
யாவும் உடைந்த நிலாக்கள்.

உருகித்தவிக்கும்
எண்ணங்கள் பல.
வண்ணங்களாகக் கலையும் பிம்பங்கள்.

தேடல் நிறைந்த
இளமையின் வாயில்கதவுகள்
திறவுகோலின்றி
மூடிக்கிடக்கும் பெட்டகங்கள்.

வாசல் கோலமென நினைத்த
வாழ்வு
விதிகெட்டு
அலங்கோலமான நிதர்சனங்கள்.

இனிமை சுமக்கும்
நள்ளிரவில் காயும் நிலவும்
ஏளனம் செய்யும்
நிறைவேறா ஆசைகள் சுமந்த
கிளிஞ்சல்கள்.

மொட்டாக மலர்ந்த மறுநொடி
சருகாக
உலர்ந்த இலைபோல
மணவாழ்வு செய்யும் லீலைகள்.

அயரும் தருணம்
ஆதரவாய் தழுவும் கரம்தேடித்
தேக்கிய ஆசைகள்
தேறா நிராசையான மாயங்கள்.

இத்தனைக் கொடுமைகள் சுமக்கும்
இளமைதானா
நான் கண்ட நற்கனவு?
வாழும் பொழுதினிலே
மரணமும் சாத்தியமோ?...

**ஜெபலீலா,**
கன்னியாகுமரி.

● பகடையை
சுழற்றி உருட்டுகையில்
எனக்கு விழுந்த
முதல்தாயம் நீ.

வெற்றுக் காகிதத்தில்
எனக்கான கவிதை நீ.

இங்கொன்றும்
அங்கொன்றுமாய் அல்ல
முழுவதும்
முழுமையாகிப்போனாய் நீ.

இன்னும் ஆளுமைசெய்திட
ஏதுமில்லை
யாதும்
நீயாகிப்போன என்னிடம்.

என் நினைவின் தூரம் வரை
நீண்டே கடக்கிறாய்
கானல்
நீர்ப்பிம்பங்களாய்
தொடவும் இயலாமல்
பருகவும் முடியாமல்.

நான் தோற்பது எனில்
உன் ஆட்டத்தை கலைத்துவிடு
மீண்டும்
முதலில் இருந்தே
தொடங்கிடலாம்..

**வைகறை.**
புதுக்கோட்டை.

- நீ உதிர்த்துச்சென்ற
வார்த்தைகளால் எனக்கொரு
வானம் தயாரித்திருந்தேன்.

எண்ண மறந்து
தந்த முத்தங்களால் நீ
எனக்கொரு
இறகை தயாரித்துத்தந்தாய்.

பின்னொரு நாள்
உடைக்கமறுத்த மௌனங்களால்
நீதான் உடைத்தாய் வானத்தை.

மழைவிட்ட இன்றிரவில்
உன் வீடெங்கும் உதிர்ந்துகிடக்கும்
ஈசலின் இறகுகளை
எந்தச் சலனமுமின்றி
குப்பைக் கூடைக்குள்ளிட்டு
மூடிவிட முடிகிறது உன்னால்.

இப்போதும்
உன் கட்டிலுக்கடியில்
நகர்ந்து கொண்டிருக்கும்
உன் பிள்ளைகளின்
காலடி நசுக்கலுக்குத் தப்பிய
இறகிழந்த ஈசலொன்று.

அதனை அப்புறப்படுத்தும் போது
இதுபோலவே
மறந்து போயிருக்கட்டும்
என் முகம் உனக்கு.

**புலவூரான் ரிஷி,**
வவுனியா, இலங்கை.

● கல்லோடு மோதியுடையும்
நீழ்க்குமிழியின் வாழ்வுக்கான
ஏக்கமாய்,

தூண்டிலில் மாட்டிய மீனின்
இறுதிக் கணத்தின் சுவாசமாய்

நகரும் படகை
நடுக்கடலில் வலிக்கும் கைகளாய்

மின்சாரக் கம்பத்தில் தொங்கும்
வௌவ்வாலின் உயிராய்

வீசிய உணவுக்கு
போராடும்
காட்டு காக்கைகளின் வெறித்தனமாய்

சித்திரை மாதக்குயில்களின்
தந்திரக் கூவல்களாய்

என் சுவடுகள் பதிந்திருக்கையில்
எனைத்தேடி நகர்கிறேன்
உன்னிடத்தில்
வற்றாக்கடலின்
அலைகள்போல் ஏக்கம் தரித்தவனாய்...

**பிறைமதி,**
சென்னை—77.

● காகிதக்குப்பைகளுக்கு நடுவே
என் கவிதைகளும்
கசங்கிக் கிடக்கின்றன.

நீயில்லாத நாட்கள்
நகர்கிறது
தூக்கமில்லாமல்.

நீ
பொட்டு ஒட்டிய இடமெங்கும்
ஒரு வானம்
நிரம்பியிருந்தது.

என் கண்களில்
நீ படும் போதெல்லாம்
எப்படியேனும் விழித்துவிடுகிறது
ஒரு கவிதை.

பூப்பறிக்கத்தானே சென்றாய்?
எதற்காக
வெட்கப்பட்டன பூக்கள்?

சிரித்துவிட்டுப் போகிறாய்
காற்றுப்பட்டு
சுருங்கிப்போகும்
தொட்டாச் சிணுங்கியாய்
நான்.

அத்தனை அழகையும்
மொத்தமாய் கொண்டவள் நீ.
ஆற்றில்
குளித்துவிட்டுச் செல்கிறாய்
இதோ பார்
ஆறு
உன் கூடவே வருகிறது...

மதுமதி சிவரூபன்,
யாழ்ப்பாணம், இலங்கை.

● ஒரு மாலைநேரத் தூறலாய்
சில்லிடுஞ் சிறுநினைவுகளில் நீ
வந்துபோகிறாய் தோழி.

ஒற்றைப்பனைகள் கூட
நம் ஒதுங்கலுக்காக காத்திருக்கின்றன
நம்மிடம் சேகரித்த நட்போடு.

தொலைவுண்ட பால்யத்துடன்
தொலைந்துவிடா நினைவுகள்
இன்னுமின்னும் இறுக்கங்கூட்டுகின்றன.

வானம் தாண்டியவுடன் கனவுகளேனும்
மிஞ்சியிருக்கின்றவாவெனப்
பார்த்து வரச்சொல்லியிருக்கிறேனென்
வயற்காட்டு நாரைகளிடம்.

என் வலிகளின் முதல் நிவாரணி
நீயாய் இருந்திருக்கிறாய்
என் வழிகளின் முதலடியும்
நீயாயிருந்திருக்கிறாய்.

என் விடியலில் மட்டுமேன்
காணாமற்போனதுன் முகவரி?

இறந்த காலத்தவையாகியிருக்கலாம்
உனது இருத்தல்கள் இன்று.
ஆனாலுந்தோழி
நின் நினைவுக்குடை பிடித்தே
நகர்கின்றன எனது இருத்தல்கள்.

**எல். ப்ரியா கண்ணன்,**
அருப்புக்கோட்டை.

மீண்டும் என் நதியிடம்
திரும்பி வருவதாகச் சொல்கிறது
உன் கடல்.
மேகங்களின் பின்னால்
அலைந்து திரியும் நிலவென
உன்நினைவுகளின் பின்னால் துரத்தித்
திரிந்த
பைத்தியக்காரியின் நாட்களை மறந்து.

நடந்தேறிவிட்ட அத்தனை
பேரழிவுகளிலும்
சுழற்றியடிக்கப்பட்டுக் கிடக்கும் என்னிடம்
புதியதாய் ஒரு சங்கமம் வேண்டுகிறது
ஏதும் நிகழாதது போல.

ஒப்புக்கொள்ளும் அச்சங்கமத்தின்
அச்சாரமாய்
சில சங்குகளையோ கிளிஞ்சல்களையோ
அது பரிசளிக்கக்கூடும்.

ஆயினும்
உன் கடலை வரவேற்க என்னிடம்
பூக்கள் இல்லை.

அடர்வனக்காடுகள் உதிர்த்த
சில செத்துப்போன சருகுகளே உள்ளன.

பூரித்துச் சிரிக்க என்னிடம்
நுரைகளோ, சுழிகளோ கூட இல்லை
என் கிழிந்த இதழ்களை அமிழ்த்திக்
கொண்டிருக்கும்
சில கூழாங்கற்களைத் தவிர.

உனை சுவாசிக்காமல் மரணித்துப்போவதில்
என்னோடு கூட
சில மீன்களும் அடங்கும்
ஆகையால்...

மனம் பிறழ்ந்த நதியில்
உன் துரோகத்தின் அழுறு தெளியும்முன்,
ஏதுமற்ற பாலையின் கோடையில்
வறட்சியில் வற்றிக் கொண்டிருக்கும்
என் நதியின் நெற்றியை
உன் முத்தங்களால் ஈரப்படுத்திவிடு...

**சாயா சுந்தரம்,**
**மதுரை–16.**

- இறுக்கி மூடப்பட்ட அடைப்புக்குள்
பொத்திவைக்கத்தான்
பார்க்கின்றேன்
எனக்கான நிகழ்வுகளின்
பொக்கிஷங்களை சேர்த்துவைக்க...

வழியும் விரல் இருக்கும்வழி
பறக்கின்ற வண்ணத்துப்பூச்சிகள் என
சிறகுவிரிக்கின்ற
நாட்களை ஏனோ
பலமுறை ரசிக்கமுடியாது போகின்றன...

இமை கசியும் வெறுமையில்
பொசுங்கிப்போய்
நிழல்தரும் நினைவுதேடி
உள்ளங்கை விரிக்க
ஒன்றுமில்லாது கிடக்கின்றது
பூட்டிவைத்ததாய் நினைத்த
ஏதோ ஒன்று...

பாரியன்பன்,
குடியாத்தம்.

- என் இருக்கை
சன்னலோரம்.
சாலையோர மரங்களை
எண்ணிக்கொண்டே
பயணப்படலானேன்
சிறுபிள்ளையாய்.

நிறுத்தங்கள் வரும் சமயம்
சற்றே ஓய்வு கிடைத்தது
எண்ணிக்கைக்கும்
எனக்கும்.

பேருந்தின் மிதவேகம் கூடிடினும்
தவறவில்லை
எண்ணிக்கை.

எண்பது நூறு என
சாலையைப் பிளந்து
பயணப்படுகிறது பேருந்து.

நான்
எண்ணுவதற்கு
மரங்களற்றிருக்க
இறுக மூடிக் கொண்டேன்
கண்களை.

அன்னிய தேசத்தின் சாலையில்
விரைந்து கொண்டிருக்கிறது
பேருந்து.

கம்பம். எம்.பி. புதியவன்

மகிழ்ச்சியாய் இருந்தது
அவரைக்காட்டிலும் எனக்கு
எல்லாமே அதிகம்தான்.

முன்னிரவில்
தொடங்கிய அலங்காரம்
தொடர்கிறது இந்நிமிடம் வரை.

உச்சி முதல் இடுப்பு வரை
ஒளிர்கிறது ஆபரணம்
அவர் நகையை விடவும்
என் நகையே அதிகம்.

அழகு... அழகு
தோழிகளின் குரல்கள்
கர்வப்படுத்துகின்றன.

பாவமாயிருக்கிறது
அவரைவிடவும் எனக்கே
பரிசுப்பொருள் அதிகம்.

மகிழ்ச்சியாய் இல்லை
முதலிரவு முடிந்து
மெத்தையில் அவர்.

ஒப்பனை கலைந்து
கரித்துணியாய்
அடுக்களைக்குள் நான்...

**வாலிதாசன்,**
புதுவை.

● தினமும் அப்பாவிடம்
அம்மா சண்டை
அடகு வைத்ததை மீட்டுத்தரச்சொல்லி.
கொஞ்சநாள் பொறு
அறுவடை முடிந்ததும்
மீட்டிரலாமென
அமைதிப்படுத்தும் அப்பா.
நகரத்துக்குப் படிக்கப்போன
அக்கா
பெரிய மனுஷியாகி
தோழிகளுடன் வந்து கொண்டிருப்பதாய்
பூப்படைகிறது வீடு.
மஞ்சள் பூசுகிறது
தெருவோரத்தில்
போகிற போக்கில்
வீசிவிட்டு சென்றவளின் பேச்சு.
அறுவடை அமோகம்
சந்தோஷமாக இல்லத்தில்
மாமாவின் குடும்பத்தினர்.
நீராட்டு முடிந்து திரும்புகிறது
வெம்மை காற்று
பள்ளிக்கு சென்றுவிட்டாள் அக்கா.
ஆரம்பமானது மீண்டும்
அடிக்கடி அப்பாவிடம் அம்மா சண்டை
அடகு வைத்ததை மீட்டுத்தரச்சொல்லி...

மு.கோபி சரபோஜி,
இராமநாதபுரம்.

● காற்றின்
திசைக்கேற்ப பறக்கும்
நுணுக்கத்தையும்,
வல்லூறுகளிடமிருந்து
தப்பிக்கும் தந்திரத்தையும்
சொல்லித்தந்து
ஒரு பறவையாய் மாற்றியவர்
தட்சணையாய் கேட்டார்
சிறகுகளை.

சுமன்,
பாண்டிச்சேரி.

● எந்தன் குமுறல்களின் கனம் கொஞ்சம்
குறையட்டுமென
எந்திர சிரிப்பொன்றை
எடுத்து ஒட்டிக்கொண்டேன்.

முன்னிருக்கையிலும்
பின்னிருக்கையிலும் இருந்தேன்
முறுவலை ஒட்டிக்கொள்ள
மனமில்லாதிருப்பதை கண்டபடி.

வாகன இறைச்சலையும் மீறிய
அவர்தம் மௌன இறைச்சலை சகிக்க
வழியின்றியும்

சட்டைப்பைகளுக்குள் பதுங்கியபடி
அடுத்தவரை எட்டிப்பார்த்து
ஒப்பீடு செய்து
என்னை தாழ்விரக்கம் கொள்ளச்செய்யும்
தரமற்ற மனங்களை
உற்று நோக்கியபடி

அகமலர்ந்த நகைகளை
எங்கேனும் காணோமோவென்ற
ஆதங்கத்தை
என்னிதழோர வலியிலொழுகும்
எச்சிலுடன் விழுங்கியபடி
நிமிர்ந்த விழிகளில்

குறுநகை கொஞ்சியிருக்க
விகசித்த நாசியுடன்
விண்மீனை பரிகசிக்கும் விழிகள் பளபளக்க
குழறும் மொழிபேசி
மென்கரம் நீட்டியெனை
தொட்டுப்பார்க்க
எத்தனித்த
குழந்தையை கண்டவுடன்

ஒட்டிய சிரிப்பை
நிரந்தரமாய் ஒட்டிக்கொண்டு
உற்சாகமானேன்

அந்நாள்
அர்த்தம் பொதிந்ததாய் மாறிற்று...

**கரிக்கட்டிகவி,**
**நெய்வேலி.**

- காலையில் நகரம் கலவரமானது
எட்டு மணிக்கே கூட்டம்.

கடைகளின் முன்னே
காவல்துறை கட்டுப்பாடுகள்.

பத்துமணியாகுமாம்
பக்கத்திலே குரல் வந்தது.

சித்தாள் வேலைக்கே.. யப்பா
சீக்கிரம் திறங்களப்பா..
ஏனென்றும் எதற்கென்றும்
யாரிடமும் பதிலேதுமில்லை.

இரவில் கிளம்பிய கிசுகிசு
நகரையே வரிசையில் நிறுத்தியது.

குடியுரிமை நீடிக்கக் கட்டாயம்
எல்லோரும் குடிக்க வேண்டுமாம்.

விற்பனை இலக்கை எட்டாதவனோ
அரசு எதிரியோ கிளப்பிய புரளி.

பொன்னுத்தாய், வயது எண்பது
ஏதேனும் ஒரு குவார்ட்டரு
மகனிடம் கேட்டறிந்து
மனப்பாடம் செய்கிறாள்..

மதுவாங்கிய ஆதாரம்
கையிலே வைத்திருக்க உத்தரவாம்.

கதவைத்தட்டும் சத்தத்தில்
கனவு கலைந்தது.

கருமலைப் பழம் நீ
சென்னை.

● மலை முகடுகளில்
மேகங்கள் கூடி
முட்டிப் பார்க்கின்றன...
கிழக்கைக் கிழித்தால்
வெளிச்சம் வரும் என்று!

தொண்டைக்குள் ஏதோ
சிக்கிக் கொள்ள
வெறும் தலையை உயர்த்தி
கூவக் குரல்வராமல்
தவிக்கின்றன சேவல்கள்.

பூக்களும் பறவைகளும்
புரியாத பூமியும்
காத்துக்கிடக்கிறது.

இருட்படர்ந்த பொய்யில்
விழுந்த விழிகள்
இன்னும் மூடிக்கிடக்கின்றன.

தருமத்தின் குரல்வளையை
அழுத்தமாய் இறுக்குகின்றன
கறைபடிந்த கரங்கள்
மூச்சுவிட முடியாதபடி.

வாழ்க்கையின் உன்னதங்கள்
ஒவ்வொன்றும்
வாழ்க்கைப் படாமலேயே
வதைபடுகின்றன...

இரா.மதிபாலா,
நங்கநல்லூர்.

● ஒளிவு மறைவு அற்று
எல்லாவற்றையும்
சொல்லச் சொல்லும்

மனஅரிப்பின்
ஓங்காரக்கூச்சல்.

சொல்லத்தேடுகையில்
தகுதியான
ஆள் அற்றுப்போகும்.

ஆள் அகப்பட்டு
சொல்லத்துணிகையில்

பயம்வந்து
பயமுறுத்தும்
நாளையை சொல்லி.

சாகும் பொழுதில்
சொல்லத் துணிகையில்
வரும்.

பரம்பரையை
நினைவுபடுத்தி
வாய் அடைக்கும்.

செத்த பின்பும்
உயிருடன் இருக்கும்
இரகசியங்கள்
மறைவாய் சாகாது.

க.கோபிலெட்சுமி,
தஞ்சை–3.

● நாணலும் கோரையுமாய் வளர்ந்து
செடிகளிலும் கொடிகளாலும் படர்ந்து
காட்சி பிழைகளாகவே காணமுடிகிறது
நதிகள் எங்கும்.

நாரையும் மீன்களும்
மிகுந்த நதிகளெல்லாம் மாறி
தேரைகளே மிகுந்து மீன்களை தேடுகின்றன.

பாலீத்தின் பைகளாலும் மாமிச இறைச்சிகளாலும்
நீர்நிலைகள் உறைந்து கூவக் காட்சியில்
நதியின் பெயரே தொலைந்தன.

பளிங்குபோன்ற கூழாங்கற்களும்
கிளிஞ்சல் வெண்மையும்
வெளிர் வெயில்பட்டு கண்களை குத்தும்போது
முகம்மறைக்க காத்திருந்த கைகளெல்லாம்
நாசியைப்பிடித்து நகரவே தூண்டுகிறது
அமிலம் கலந்த தொழிற்சாலை
கழிவு நீர்களின் காற்றுப்பட்டு.

முங்கி எழுந்த தெளிந்த நீரை
நதியெங்கும் தேடி அலைந்தும்
குடம் நீரில் குளித்து
களைப்பாற மனம் வரவில்லை.

நதியிலே குளித்து
நதியிலே துவைத்து
நதியிலே குடம்நீர் கொண்டுவந்து
குடித்துப் பழகிய பாட்டிக்கு
மினரல் வாட்டரைக் கூட
பழித்துப் பருகுகிறாள்
நதிநீர் சுவைப்போல்
வராது என...

கவிதை மொழியன்,
மங்கலம், திருப்பூர்.

● முத்துப்பாசி
பத்துருபாய் கம்மல்
ஒத்த ரூபாய் மோதிரம்
இரப்பர் வளையல்
பேப்பர் தொப்பி
பேனா பொட்டு
பென்சில் மீசை
சாக்பீஸ் ஒப்பனை
சாணிப் பிள்ளையார்
பரீட்சை அட்டை
பாவாடை சட்டை
பச்சை தாவணி
பொம்மை தலகாணி
அக்கா நெக்லஸ்
அப்பா செருப்பு
அண்ணன் சைக்கிள்,
தம்பி தீனி டப்பா
என
நீ
விரும்பி பயன்படுத்தியப்பின்
புறக்கணித்த
பொருட்களின்
பட்டியலில்
உயிருள்ள பொருளாய்
உணர்கிறது
உன் 'பிரிவை'
என் இதயம் மட்டும்.

நா.கோகிலன்,
ஜோலார்பேட்டை.

● கைகளை அகலவிரித்து
காட்டும் படியான பெரியவீடு.

அந்தவீட்டில் பூக்கள்
குலுங்கும் செடிகள் நூறு.

கேட்பவர்களுக்கு கொடுத்தது போக
எப்பவும் சில மியாவ்கள்.

நாய்களும்
நாலுவகை உண்டு.

தோப்பு மரங்களில்
தேன்கூடும் சில உண்டு.

பப்பாளியும் வாழையும்
பாதையிலிருந்து பார்த்தாலே
மதிலை மீறி தலைகாட்டும்.

பச்சைக் கிளிகளும்
மணிப்புறாக்களும் எந்நேரமும்
ஆடிப்பாடும்.

அந்த வீட்டம்மா
மலடு என எவர்சொன்னாலும்
வருகிறது
கொலைவெறி.

கோ. மகேசன்,
மாத்தூர்.

● புறவாசல், திண்ணை வாசல்
உள், வெளிப்பிரகாரம்
நடுக்கூடம், சாமி, சமையல்
படுக்கையென அறைகள் அனைத்தும்
அப்படியே இருக்கின்றன
புதுப்பிக்கப்பட்டு.

அவ்வீட்டு வாசிகளான
தாத்தா பாட்டி
முதியோர் இல்லமொன்றில்.

பெரியப்பா, பெரிய மாமனும்
சிறைச்சாலையில்.

அம்மாவும் அப்பாவும்
அலுவலக நாற்காலிக்குள்ளும்

நானும் என் தங்கையும்
அன்புள்ளம் குழந்தைகள் காப்பகத்திலும்
சிதிலமடைந்து கிடக்கிறோம்.

**சம்பத் இளங்கோவன்,**
சேலம்–8.

- கடவுளின்
  கல்லறையைத்
  தேடிக்கொண்டிருக்கிறேன்
  எங்கோ புதைந்திருக்கலாம்
  எவராவது மறைத்திருக்கலாம்
  அடையாளம் காண்பதும்
  எளிதானல்ல
  அறிந்தேயிருக்கின்றேன்.
  நிச்சயம்
  அவன் கல்லறையில்
  உண்டியல் இருக்காது என்பதால்
  தேடி அலைகிறேன்..

**ராஜகவி ராகில்,**
**சிசெல்சு.**

● பட்டுக்கம்பளத்தில்
பாதணியோடு நடக்கிறாய்
தைக்கின்றன
நீ செய்த பாவங்கள்
முட்களாகியும்
கற்களாகியும்.

தேனீ காத்திருக்கின்றது
எப்போதாவது
நீ
இனிப்பு வார்த்தைகள்
சொல்லமாட்டாயா என.

தேள் செத்துக்கிடந்தது
நீ பேசியதை
அது கேட்டிருக்கவேண்டும்.

உன்னை நீ நம்பாதவரை
உயிரில்லை உனக்கு.

தோற்றுப்போகின்றன
அபாயமான ஆயுதங்கள்
கொடிய
உன் மனம்
நினைவுகள் பார்த்து பார்த்து.

உன் பாவம் தாங்காமல்
முனகியது பாறை.

கற்கவிரும்பியது நரி
குள்ளத்தனம் பற்றி.

வெளிச்சத்தாலும் முடியாது
உன் இருள்துடைக்க.

மிகவும் பிடிவாதம் பிடிக்கிறாய்
பாவியாகத்தான்
வாழ்வேன் என்பதில்.

சர்க்கரை ஆற்றில்
மூழ்கினாலும் இனிக்காதவன்
நீ.

என் பிரார்த்தனை எல்லாம்
உன்னிடம்
தீக்குச்சி
கிடைக்கக்கூடாது என்பதுதான்.

ப்ராங்ளின்குமார்,
மதுரை.

● அம்மாவின் வளையல்களை
அணிந்திருக்கும் சிறுமி
அதை
சரியாது
திருப்பும்போதெல்லாம்
தோள் தொட்டு
கீழிறங்குகிறது
இசை.

வண்ணை. **சிவா,**
சென்னை—51.

● பிசைந்த களிமண்ணில்
எதையாவது செய்ய
முற்படும்போதெல்லாம்
உன்னின் உருவமே
வடிவம் கொள்கிறது.
யாரிடமும் சொல்லாமல் மறைத்த
சிநேகத்தை வெளிப்படுத்திய
உன்னின் சொரூபம் பதிந்த
அந்தக் களிமண் சிற்பத்தை
போகுமிடமெங்கும்
தூக்கிக்கொண்டு அலைகிறேன்.
பார்ப்பவர்கள் பரிசிக்கிறார்கள்
பொம்மையைச் சுமக்கும்
பரதேசிக் கிறுக்கனென்று
உன்னை சுமக்குமென்னை.

**கவிமுகிலன்,**
திருப்பூர்.

● இராஜ போதையில்
கண்கள் சிவந்திருக்கும்,

இராவுத்தர் பிரியாணி நாளும்
குடலில் நிறைந்திருக்கும்,

ஆட்டுக்கடாமீசை
ஆளையெல்லாம் மிரட்டும்,

ஆஜானுபாகுவாய் அவன்
அப்படித்தான் உலா வருவான்.

தண்டல் தண்டலென்று
தாலிகளையும் வாங்கிச்செல்வான்.

தண்டோரம் கேட்டது
பின்பொரு நாளில்
தலைத்துண்டிக்கப்பட்டு
தண்டவாளம் ஓரத்தில்,

முண்டமொன்று
அநாதையாய் கிடக்கிறதென்று.

## கு.விநாயகமூர்த்தி

● மகுடஞ் சாவடியைப் பார்த்தால்
சாதாரண ஊராகத் தெரியவில்லை.

கொட்டாங்குச்சியால் ஈரமணலில்
இட்லி சுட்டு விற்கும்
ஒரு சிறுவனிடம்
இரண்டு இட்லி வாங்கிய எனக்கு
கொசுறாக கையில் வைத்திருந்த
இட்லிப்பூவையும் சேர்த்து தருகிறான்.

அம்மாவிடம் சோற்றுண்டை வாங்கி
சிறுமியொருத்தி
வாசலில் பாட்டி உட்காரவைத்திருந்த
கிளி ஜோசியக்காரனின் கிளிக்கு
பிஞ்சு உள்ளங்கையில் வைத்து
ஊட்டிவிட்டு சிலிர்க்கிறாள்.

வாசலில் வந்துநிற்கிற
கீரை விற்கிற பாட்டியிடம்
பேரம் பேசாமல் கீரை வாங்கிவிட்டு
குவளை எலுமிச்சைச்சாறு தந்து
புன்னகைக்கிறாள் ஒரு அக்கா.

ஆசையாய் வளர்த்த கோழிக்குஞ்சை
தூக்கிச்சென்ற
பருந்தை வெறித்தபடி
மஞ்சள் கொன்றை மலர்கள்
விரிந்திருக்கின்ற நிழலில்
சாமந்தியின் இதழ்களை பிய்த்துப்போட்டபடி
கவலையுடன் அமர்ந்திருக்கும்
ஒரு ஆச்சியின் காலடியில்
கோழிக்குஞ்சை இறக்கிவிட்டு
சிறிய சத்தமொன்று கொடுத்து
வேகமாய் சிறகசைக்கிறது பருந்து.

இவர்களையெல்லாம் கூட விடுங்கள்.
ஒன்றுக்கும் ஆகாத சாதாரணனை
ஒரு கவிஞனாக ஆக்கிவிட்ட
தமிழரசியை வளர்க்கிற
மகுடஞ்சாவடியை சாதாரண ஊரென
எப்படிச் சொல்வது...?

## ஹைக்கூ

## வாசல்



## உங்களை வரவேற்கிறது

● காட்சிகளை மாற்றி
கடந்துபோகிறது
ஹைக்கூ.

– காவனூர். **ந.சீனிவாசன்**

முனைவர். **மித்ரா**

● மொட்டை மாடியை
அளக்கும் நடந்து நடந்து
சின்ன குருவி.

இருண்ட நீரில்
தாவும் பூச்சிகள்
கலங்கும் நீரோவியம்.

தொலைவில் நீர்வீழ்ச்சி
தெரியும் வெள்ளிக்கோடாய்
மலை ஓவியம்.

மழைப்பாட்டை
இரசிக்கும் மௌனமாய்
இரவுநேரம்.

பூக்கும் கவலையற்று
ஞானியாய்த் தன்போக்கில்
காட்டுச்செடி.

காய்ந்தசெடியை
வெட்ட நினைக்கும்போது
முகம்காட்டும் மொட்டு.

வழிநெடுக மைல்கற்கள்
ஓய்வெடுக்கும் எண்ணிஎண்ணி
ஒற்றைப் பறவை.

வரும் மழை
பேசும் அவசரமாய்
பறக்கும் குருவிகள்.

சிரிக்கும் புற்கள்
குடைபிடிக்கும் காளான்
மழைக்குப்பின்.

**வதிலை. பிரபா.**

● நெல் வயலில் மீது
பறக்கும் வண்ணத்துப்பூச்சிகள்
தேடுமோ பூவிதழ்.

கவிழ்ந்த கப்பல்
இன்னமும் ஓட்டிக்கொண்டிருக்கும்
பால்ய நினைவுகள்.

சிறைபட்டிருக்குமோ சூரியன்
இலையில் வடியும்
பனித்துளி.

வலை வீசுகிறான்
வீசும் வலையில் சிக்குமா
கொக்கின் நிழல்.

பாம்புகள் நெளிந்த
அடர்வனமெங்கும் மணக்கும்
மலர்ந்த தாழம்பூ.

மின்னி மறையும்
மீன்களின் துள்ளல்
வற்றும் ஆறு.

ஆர்ப்பரிக்கும் வெள்ளம்
மெல்ல மெல்ல அடங்கும்
தவளை சப்தம்.

வற்றிய நதி
தப்பியிருக்குமோ மீன்தொட்டியில்
துள்ளும் மீன்கள்.

## அமுதபாரதி

● கழுகொன்று வந்தமர்கிறது
பனித்துளிக்குள்
தெரியும் மலையில்.

பறந்து பறந்து தவிக்கிறது
மதுக்கடைக்குள்
தவறிவந்த பட்டாம்பூச்சி.

நிலவைத் துளைத்து
மூச்சுவாங்குகிறது
கிணற்றுத் தவளை.

வீட்டை இடிக்கிறார்கள்
அந்த சன்னலில்தான்
இரையுண்ணும் காக்கைகள்.

ஒவ்வொரு நெல்லிலும்
இருக்கிறது வருமானம்
கிளி சோதிடருக்கு.

பழக்காரியின் மனசுக்குள்
திட்டிக் கொண்டிருக்கிறான்
குடிகாரக் கணவன்.

இறந்தபின்னும் மனிதர்கள்
பயமுறுத்துகிறார்கள்
மயானத்தில்.

நாளெல்லாம் முயன்றும்
இருட்டைக் காண முடியாமல்
மறைகிறான் சூரியன்.

தூக்கி நிறுத்த
முடியவில்லை
விழுந்த நிழலை.

தஞ்சாவூர். ஹரணி.

● இடிக்கும் வீட்டை
வேடிக்கை பார்க்கிறது குருவி
அங்கிருந்தது முன்பொருமரம்.

கூடமைக்க பொறுக்கி வருகிறது
தேன்சிட்டு சிறுசுள்ளிகளை
சொற்களுடன் நான்.

மழை என்றெழுதினாலே
ஈரமாகிறது
உள்ளும் புறமும்.

எங்கேனும்
இடறிக் கொண்டேயிருக்கிறது
சிறுகல் மட்டுமல்ல.

எங்கும் அருவமாய்
இழைந்து கொண்டேயிருக்கின்றன
சாதிப்பாம்புகள்.

தொட்டியில் நீந்தும்
மீனின் கண்களில் தெரிகிறது
கடல்.

**நா.விச்வநாதன்,**
அரசூர், தஞ்சை.

● பனிக்குமிழ் தாங்கும் பூவிதழ்
உதிர்தலில்லை இப்போது
புத்தர் மௌனம்.

மழை பார்க்கும் ஆவல்
தூண்டிலை முத்தமிட
மரணத்தின் சுவை.

அரவம் போனவழி
அச்சமும் கூடவே
தொடரும் கால்கள் பயம்.

அலைகள் மோதும் கரை
மொழி புரிந்தது
கவனமாய் மரம்.

அவரவர் அள்ள அள்ள
ஆற்று நீர் வேகம்
அடையாளம் கரையாமல்

காற்றின் திசை வேறு
சொற்கள் விழுந்துகிடக்கும்
புத்தன் மடியில்.

எங்கே சென்றடைவது
நாலுவழிப் பாதை
எதில் மனிதக்குரல்.

கூர்வாள் நுனியிலும்
பேசலாம் சமாதானம்
மரணம் வெகுதூரம்.

கேட்க கேட்க இனிது
குயில் மட்டுமன்று
இருவர் மெய்ப்பேச்சு.

**யாழ் அகத்தியன்,**
**லண்டன்.**

● புத்தனைக்கூட
சிலைசெய்து விற்கிறது
பணத்தாசை.

மரங்களை வெட்டாதீர்
யாரோடு பேசும்
காற்று?

மழையை நம்பும் வயலில்
முளைத்திருந்தது
ஏமாற்றம்.

காகிதக் கப்பல் மூழ்கிறது
மறுபடி பெய்யத்தொடங்கியது
மழலையின் கண்களில் மழை.

வாடிய பூக்காரியின்
முகத்தை சிரிக்கவைத்தது
விற்ற பூக்கள்.

குழந்தைகள் இல்லாத வீட்டில்
அனாதையாய்
பொம்மைகள்.

மழை
குடைக்குள் நனைகின்றன
உன் ஞாபகங்கள்.

இரதிபாலா,
புலியூர், கரூர்.

● அந்தப்பறவையோடு
விளையாடிக் கொண்டிருக்கிறேன்
இறகுப்பந்து.

வீட்டிற்குள் இருக்கிறோம்
வெளியில்
நட்சத்திர வெளிச்சம்.

நீர் ஊற்றிய பின்னும்
பற்றிக் கொண்டது தீ
மது.

கோப்பை நிரம்ப மது
மூழ்கிக்கொண்டே இருக்கிறது
உயிர்.

தேடிக் கொண்டிருக்கிறேன்
போதி மரத்தடியில்
தொலைத்த மோதிரத்தை

முடிந்துவிடுகிறது இரவு
எண்ணி முடிப்பதற்குள்
நட்சத்திரங்களை.

முகவை. முனீஸ்,
இராமேஸ்வரம்.

● ஒழுகும் குடிசைக்குள்
வாழவைக்க வேண்டும்
மழையை ரசிப்பவனை.

ஒவ்வொரு பண்டிகையிலும்
மருதாணிக் கனவுகள்
கைகளற்ற சிறுமி.

எரியும் குடிசை
நெருங்க முடியவில்லை
தீ மிதிக்கும் பக்தன்.

பெருங்காற்று
வேரோடு சாய்ந்தது
சாமி மரம்.

தீயில் கருகும் ராகம்
ஊதுகுழல் வழியாய்
அம்மாவின் மூச்சுக்காற்று.

தனலெட்சுமி பாஸ்கரன்,
திருச்சி.

● தடைவிதிக்கப்பட்ட பாதையில்
துளிர்விடத் தொடங்கின
புற்கள்.

கை நழுவிய நூல்கண்டு
போட்டுச்செல்கிறது நீண்ட
ஒற்றையடிப்பாதை.

குருதி பூத்த முகம்
உறைந்திருக்கிறது
புன்னகை.

வன்முறை ஓய்ந்ததும்
வெளியே பறக்கிறது
வெண்புறா.

தாமதமாய் வீடு திரும்புகிறான்
கைப்பை நிறைய
பொய்களுடன்.

பிஞ்சுவிரல் போட்ட நாணயம்
மோட்சம் பெறுகிறது
உண்டியல்.

திரும்பிப்பார்க்கவைத்தது
பார்வையற்றவனின்
இனிய கானம்.

**கவி.வளநாடன்,**
காரைக்குடி.

● குளிரூட்டப்பட்ட அறையில்
வியர்க்கிறது
குவளைகளுக்கு.

எந்தப்பூவுக்கும் தெரிவதுமில்லை
சொல்வதுமில்லை
தன்இதழ்களில் கள்ளூறுமென.

மடலாகிப்போனது
வெற்றுத்தாள் கொஞ்சம்
மை அருந்தியதும்.

தாஜ்மகால் கனவில்
கற்களை வாங்கிவிட்டேன்
மும்தாஜைத் தேடவேண்டும்.

எதிரெதிர் திசைகளில் தேடல்
நிஜமாய் தொலைந்தது
நீயா நானா?

கா. இளையராஜா,
சாத்துக்கூடல்.

- பூப்பறித்துக் கொண்டிருந்த
அவள் தோள்மீது
வண்ணத்துப்பூச்சி.

இரவுக்கு நன்றி சொன்னேன்
விட்டு விட்டு ஒளிரும்
மின்மினிகள்.

விரலைக் கண்டாரில்லை
ஆனாலும் வயிற்றைக்கிள்ளும்
பசி.

கோடானுகோடி
மக்கள் தொகை
தனிமையில் அனாதை.

பூனையின் போக்குவரத்திற்கு
இடையூராய் மதில்மேல்
வேலையில்லா பட்டதாரிகள்.

**ம.ரமேஷ்,**
**முத்துக்குமரன் மலை.**

- மரமேதுமில்லை
  குயிலின் மெல்லிசை
  புல்லாங்குழல் விற்பவன்.

  பழுத்த இலைகளோடு
  காற்றிலாடுகிறது
  ஒடிந்த கிளை.

  கனம் அதிகம்
  கொஞ்சம் குறைக்கபட்டது
  எடைக்கல்லின் எடை.

  மாலை சில்வண்டு
  இரவு மழையில் தவளை
  காலையில் குயில்பாட்டு.

  தூர வீசினாலும்
  அழகாய் நிற்கிறது
  நாற்றுக் கட்டுகள்.

  அமர்ந்து பறக்கிறது
  காவல் பொம்மைமேல்
  நெல்லெடுத்த குருவி.

நா.துளசி,
சேலம்.

● முட்கள் நிறைந்த புதர்
வெளியே வருகிறது
வண்ணத்துப்பூச்சி.

காம்பிழந்த பூக்கள்
அழகாகிறது
குப்பை.

பலூன்காரன் நுழையாத வீதி
வெடித்துக் கொண்டிருக்கின்றன
சிறுமிகளின் சோப்புக்குமிழிகள்.

தலை நிமிரும் யாசகன்
அடுக்குமாடியில்
தேன் கூடு.

திறக்கப்படாத அணைகளில்
நிரம்பி வழிகிறது
விவசாயிகளின் கண்ணீர்.

குடிநீருக்கான சாலை மறியல்
முதல் வரிசையில்
பால் வியாபாரி.

பறவையின் கூடு
சலசலப்பிற்கு பின்பு
தரையிறங்கும் நாகம்.

**வினையன்,**
கங்கைகொண்டசோழபுரம்.

● கரையான்கள்
கட்டிமுடித்த வீடு
பாம்புகள் சொகுசாய் வாழ.

கருவேலங்காடு
துருப்பிடித்த பலகையில்
தென்றல் நகர்.

வியர்த்தது புற்களுக்கு
பனித்துளிக்குள்
காதலர்கள்.

இதழோரம் புன்னகைகள்
உதிர்ந்தது வீதிமரங்களின்
இலைகள்.

திருவிழா கூட்டம்
காணவில்லை குழந்தை
தேடினார்கள் கடவுளை.

இரயில் பயணம்
இணைத்த காதல்
பிரிந்தது தண்டவாளத்தில்.

வே.சுப்ரா,
திருநெல்வேலி-11.

● ஒற்றைக்கல்
வற்றிய குளம்
விரியும் நினைவுகள்.

கட்டப்படாத அணை
நிரம்பி வழிகிறது
ஆதாய அரசியல்.

வாலறுந்த பட்டம்
தரையினில் வீழ
வால்மட்டும் மேலேமேலே.

உரையாடுகிறது
மலையடிவார மௌனச்சாமியாருடன்
காற்று.

பூட்ட இயலவில்லை
இரட்டைத் தாழ்ப்பாள்போட்டும்
கவிஞனின் மனதை.

கரடி பொம்மைகள்
ஓய்வெடுக்கின்றன
தூங்கும் குழந்தை.

இராமன் வேடம்போட்டான்
கவர்ந்து சென்றான்
உள்ளூர் சீதையை.

பாகப்பிரிவினை முடிந்தது
அப்பா மூத்தவனுக்கு
அம்மா இளையவனுக்கு.

சு.கேசவன்,
தொண்டையூர்.

● பூபாளராகம்
நெசவாளி வீட்டில்
விசைத்தறி ஓசை.

இருண்ட வீடு
திறக்காத சன்னல்
தீபமேற்றும் விழிகள்.

கனவில்
பொய்க்கால் குதிரை
குளம்படிச்சப்தம்.

சுழற்காற்று
மையத்தில் உறையும்
பேரமைதி.

வீட்டில் தனிமை
மொட்டைமாடிக்கு அழைக்கின்றன
நட்சத்திரங்கள்.

வீ.தங்கராஜ்,
காஞ்சிபுரம்.

● உதிர்ந்த இலைக்கு
நன்றி கூறுகிறது
தளிர்.

வண்டு துளைத்த மூங்கில்
இசைஞானியானது
காற்று.

சரிபாதியாய்
கூறுபோட்டது யார்?
வானத்தில் பாதி நிலா.

துளிப் பசிக்கு
ஓயாத பாட்டு
இராப்பிச்சை கொசு.

செண்பகஜெகதீசன்,
நாகர்கோயில்.

● விளக்கை தேடிவந்து
வீழ்ந்த வரலாறு பேசும்
ஈசல் இறகுகள்.

ஒற்றை ஊஞ்சலில்
ஓசையின்றி ஆடிக்கொண்டிருக்கிறது
காற்று.

தோப்பு விற்றது
தெரிந்திருக்குமோ குயிலுக்கு
சோககீதம்.

நதியின்மொழி தெரிந்திருக்கிறது
குனிந்துகேட்கும்
நாணல்.

கூவி விற்றவள்
கூடையை இறக்கினாள்
நிறைய கவிதை.

பாடப்புத்தகத்தில்
நட்பின் மணம்
உள்ளே மயிலிறகு.

சுரேஷ் பவானி,
கீழப்பெரும்பள்ளம்.

● கையில் இன்னும் ஈரம்
ஆற்றில் அள்ளிவந்த
நிலா.

அலையை முந்தி
மணல்வீட்டை கரைத்திருக்கலாம்
என்னைத் துரத்திய மழை.

தாவத்துடிக்கிறது
பந்தல் உயரத்தையும் தாண்டி
பூசணிக்கொடி.

கரைசேரும் படகில்தான்
பயணம்
பிடிபட்ட மீன்கள்.

சருக்கி விழுகிறது
அடுக்க நினைத்த நூல்களில்
மறுபடியும் மனசு.

புதுமை தமிழினி,
கீழடி.

● பூவுக்கான தேடலில்
துளைத்தது
முள்.

நித்தம் நித்தம்
நிலாச்சோறு
நட்சத்திரங்களுக்கு.

மணிகட்டிய பூனை
பிடிபடவில்லை
எலி.

அரங்கேறியது
கொலுசு வைத்த காசில்
கண்ணகி கூத்து.

ஊரைக்காக்கும் மாகாளிக்கு
உண்டியல் பூட்டு உபயம்
பூசாரி.

சிரித்த முகமாய்
பள்ளி கிளம்பினாள்
சீடை விற்கும் பாட்டி.

நாகினி,
துபாய்.

● விதவைக்கு
சொத்தில் பாகம்
மல்லிகைத் தோட்டம்.

பசியுடன் சிறுவன்
இறைவனுக்கு
அன்னக்காப்பு.

மருத்துவராகும் குழந்தை
கை உடைந்த பொம்மைக்கு
சிகிச்சை.

கனிவு கொடுக்கும் பாட்டு
ரசிக்க முடியவில்லை
குழந்தைத் தொழிலாளி.

பஜனைப் பாடல்
கூடவே வருகிறது
மார்கழிக் குளிர்.

மக்கள் வெள்ளம்
ஆற்றில் இறங்கும்
கள்ளழகர்.

மேலப்பட்டு. **யாழிசை மணிவண்ணன்,**
**சிங்கப்பூர்.**

● சுருக்கிய பின்
சுமையாய் தெரிகிறது
குடை.

அட்சய திரிதியை
பெருகுகிறது தங்கம்
அடகு கடைகளில்.

விற்காத குபேரன்களோடு
ஏழையாகவே இருக்கிறான்
பொம்மை வியாபாரி.

பிரார்த்தனைக்கு ஏதுமில்லை
புத்தனின் ஆலயத்தில்
தேவைகளெல்லாம் ஆசைகளாய்.

யார் கண்பட்டது
உடைந்து கிடக்கிறது
திருஷ்டிப்பொம்மை.

**ஆர்.பரஞ்சோதி.**
பஞ்சநதிக்குளம் (கிழக்கு) நாகை.

● உதிர்ந்த சுள்ளிகள்
மீண்டும் மரத்தில்
காக்கையின் கூடு.

ராமன் கிழித்தான் கோடு
தாண்டிச் செல்கிறது
அணில்.

ரகசியம் பேசுமிருவர்
மெல்லத் தலையாட்டியபடி
மரத்தில் ஓணான்.

தீயில் இறந்தது சிகரெட்
மலர் வளையம்
மனிதனுக்கு.

கூடிவாழ்ந்தால் கோடிநன்மை
மாமனார் மாமியார்
அனாதை ஆசிரமத்தில்.

குடித்துக்கொண்டேயிருக்கிறது
மது
மனித உயிர்களை.

அருணாச்சலசிவா,
சென்னை-41.

● சுள்ளி பொருக்கும்
பெண்ணுக்கு கோபம்
வசந்தகாலத்தின் மீது.

மூடிய கண்ணாடி
ஜன்னலுக்குள் நுழைகிறது
பூனையின் நிழல்.

சந்தனக்காடு
வாசம் வீசுகின்றன
குயிலின் சிறகுகள்.

துருவம் செல்லும் பறவை
குளிர்காய வந்தமர்கிறது
தீபத்தின் அருகில்.

தொடர்வண்டி வரும்நேரம்
அறிந்திருக்கின்றன
ரயில் பாதை மாடுகள்.

அற்ப சந்தோஷ மனம்
எட்டிப்பார்க்கிறோம்
எதிர்வீட்டு சண்டையை.

சாயிராம்,
தஞ்சை–1.

● பென்சிலால்
குழந்தை வரைந்த ஓவியத்தில்
மரம்.

கையில் ஊஞ்சல் பலகை
தேடுகிறேன்
தாங்கும் மரத்தை.

சாய்வு நாற்காலியில்
சாய்ந்தது நினைவுகள்
பிரிந்த தந்தை.

மரம்வெட்டிய கோடரி
கைப்பிடியில் வந்தமர்ந்தது
சிட்டுக்குருவி.

சுடும் காலுடன்
கோயிலில் வலம்
நிழலில் செருப்பு.

வெளியேறும் போராட்டம்
சர்க்கரைப் பாகில்
விழுந்த எறும்பு.

ஆர்.எம்.நுஸ்ரி,
இலங்கை.

● பிடியில்லை கோடரிக்கு
நிம்மதிப் பெருமூச்சு
மரம்.

தொடாத வானம்
மேனி தொடுகிறது
தூவும் மழை.

மழைக்கு ஒதுங்கும் காகம்
சிறகுக்குள்
குயில் குஞ்சு.

உச்சி வெய்யில்
உள்ளத்துள் மழை
காதல்.

ஏழை வீடு
கம்மல் பத்திரமாய்
அடகு கடையில்.

சிந்திக்க நேரமில்லை
சிரித்தே கழிகிறது
பைத்தியக்காரன் வாழ்வு.

அம்மாவை அழைக்கும்
பிச்சைக்காரன்
கண்ணீரில் முதியோர் இல்லம்.

**வெற்றியன்பு,**
ஆயக்காரன்புலம்-4.

● அடர்ந்த காடு
யாருமற்ற இரவில் பேசின
சருகுகள்.

இயந்திரம் உழுவதை
வேடிக்கை பார்த்தன
உழவுமாடுகள்.

போக்குவரத்து நெரிசல்
எளிமையாக பயணிக்கிறார்
எமன்.

மக்காத குப்பை
பிரித்து வைத்திருந்தது
இறந்த பசு வயிற்றில்.

வளர்ப்புத் தேனீ
கையெல்லாம் கொட்டியது
பணம்.

வெயில்
முளைத்து நிற்கிறது ஆங்காங்கே
குளிர்பானக்கடை.

சிறுவயதில் ரசித்தேன்
தேன்சிட்டுக் குருவியை
வீட்டுத் திண்ணையில்.

எஸ்.ஆர். ஹிஷாலி,
வேளச்சேரி.

● பழைய மரம்
அலைமோதும் பறவைகள்
புதிய பழம்.

ஒரு மனதாய்
தேர்ந்தெடுத்தனர்
மோதிர விரல்.

எந்த நூற்றாண்டின்
கண்ணீரோ
உப்புக்கரிக்கிறது கடல்.

எங்கிருந்தோ எரிக்கிறான்
உருகினேன்
மெழுகாய்.

பட்டியூர். **செந்தில்குமார்,**
**துபாய்.**

● வெயில்
சாலையில் நீண்டிருந்தது
பனைமர நிழல்.

படர்ந்துகிடக்கிறது
பந்தலில்
காய்ந்த கொடி.

குளிர்சாதன அறை
கண்ணாடி சன்னலுக்கு வெளியே
சூரிய ஒளி.

ஜன்னலோர இருக்கை
ரசிக்கவிடவில்லை
ஒழுகும் பேருந்து.

மாட்டுத் தொழுவத்தில்
சாணம் இல்லை
நிற்கும் டிராக்டர்.

படிக்காத திருடன்
மனக்கணக்கு போடுகிறான்
பூட்டிக் கிடக்கும் வீடு.

பசித்தும் உண்ணமுடியவில்லை
தின்கின்றன
கவலைகள்.

சொத்துப்பிரச்சனை
அண்ணன்தம்பி சண்டையில்
தரிசானது நிலம்.

புதுயுகா,
பண்ணந்தூர்.

● ஏற ஏற சறுக்குகிறது
மலை வாழ் மக்களுக்கு
வாழ்க்கை.

கரைசேர்ந்த மீனவன்
கண்களில்
கண்ணீர்கடல்.

காற்றில் பறந்தது
குழந்தையின் சந்தோஷம்
வெடித்த பலூன்.

நோய் எதிர்ப்புசக்தி
குறைவு
ஊட்டச்சத்து ஆயாவுக்கு.

வட்டத்திற்குள் வாழ்க்கை
சுற்றிவரும்
கடிகார முட்கள்.

சி. அருள்ஜோசப்ராஜ்,
ஆனைக்குப்பம், கடலூர்.

● மூங்கில்காடு
சத்தமிடும்
காற்று.

அமைதியான குளம்
விழுந்தது கல்
வட்டமடிக்கிறது கவிதை.

சுழன்றன சக்கங்கள்
அருகில் வந்தது
ஊர்.

வரிசையில் நின்றார்கள்
வழங்கப்பட்டது
வரிசை எண்.

பறவையில்லா வானம்
கீழே
துப்பாக்கி சூடு.

வீரா,
பொள்ளாச்சி.

● பல கோடிக்கு
ஏலம் போனது
புத்தர் சிலை.

போராட்டங்கள் ஏதுமில்லை
சாலையோரம் சங்கிலித்தொடராய்
மரங்கள்.

நியூட்டனின் விதியை
மீறுகிறது
பறக்கும் முத்தம்.

காகத்தின் கருணை
கிடைத்தது பெருமை
குயிலுக்கு.

அடகு நகைகளுக்கு
விடுதலை கிடைத்தது
ஏலத்தில்.

சட்டைப்பையில் எழுதுகோல்
கவிதை தருகிறது
காவல் பொம்மை.

**ராகவன் தமிழ்.**
பள்ளத்தூர்.

● என்ன தேடலோ
குச்சியின் உச்சிபார்த்து திரும்புகிறது
எறும்பு.

உதிர்கிறது இலையுடன்
கொஞ்சம்
நிழல்.

ஓய்ந்தது பெருமழை
பறவைகள் சிறகுலர்த்த
மீண்டும் நனைகிறது மரம்.

சிரித்த களைப்பில்
தூங்கிய குழந்தை
நண்டூருது நரியூருது.

மகிழ்ச்சியில் சிறுவன்.
வேலியில் தூங்குகிறது
தும்பி.

முளைத்தது நெற்கதிர்
அறுவடையில்
அடை மழை.

தெருக்களில் தெய்வங்கள்
கோவிலுக்குள்
அர்ச்சனை.

பசியில் அழும் குழந்தை
அமைதியானது
கிலுகிலுப்பை சத்தம்.

**எஸ்.நாகலிங்கம்,**
தென்னம்பூவயல், தேவகோட்டை.

● காற்றில் புரளும் சருகுகள்
அசைகிறது புதுவரவாய்
பழுத்த இலை.

மரக்கிளையில் அமர்ந்தபடி
இசைத்தது குயில்
கடைசி இரவு.

உடைந்த நாற்காலியில்
சாய்ந்து கிடந்தது
தாத்தாவின் ஊன்றுகோல்.

இலையுதிர் காலம்
இருப்பினும் பசுமை
நீருக்குள் பாசி.

வருத்தமில்லாமல் இசைத்தபடி
தவளை
வற்றிய குளம்.

ஊரே உறங்கியும்
சல சலப்பு
காற்றிலாடும் பனையோலை.

**அரவிந்தன்,**
வியாசர்பாடி, சென்னை.

● மேகத்தை விலக்கி
மழைநீர் குடித்தேன்
குளத்தில்.

மெல்ல இறங்கும் பனி
மதில்மேல் பூனையாய்
அதிகாலை மனம்.

உதிர்ந்த பூவை
நகர்த்தி அழைக்கும்
காற்று.

வீடுகளில் புகுந்தது
மழைநீர்
வயல் நிலம்.

ஆடிக்கொண்டேயிருக்கிறது ஊஞ்சல்
யார்விட்டுச் சென்றது
மனதை.

பிறகு பார்க்கலாம்
வானம்
இப்போதைக்கு பசி.

காற்று தொடத்தொட
சிவக்கிறது
நெருப்பு.

நரிக்குரவனுக்கு
நல்ல சகுனம்
எதிரில் பூனை.

கனவுகள்
விடைபெற்றுக்கொண்டன
இறந்தவரிடமிருந்து.

கடலூர். **மாரிமுத்து**

● சிதறும் மழைத்துளிகள்
கோர்க்க கோர்க்க
கவிதைகள்.

தனிமரங்கள்
தோப்பானது
அனாதை இல்லத்தில்.

ஒற்றைப் பெருமூச்சு
கடத்திச் செல்கிறது
கனவையும் காலத்தையும்.

மழலை காப்பகம்
இன்னும் வரவில்லை அம்மா
காத்திருப்பில் முத்தம்.

ஆற்றைக் கடக்கும் வரை
அண்ணன் தம்பி
கடந்த பின் பங்காளி.

சமையல் படிப்பு
நினைவில்
அம்மாவின் புகைந்தஇருமல்.

பாப்பனப்பட்டு. **வ.முருகன்.**

● இனிப்பான பயணம்
கூடு திரும்புகின்றன
தேனீக்கள்.

பூங்கா வரைந்த
மகளின் விரல்களில்
பூக்களின் வாசம்.

தூண்டிலில் தூக்கி
வழிந்த நீரில்
மீனின் கண்ணீர்.

அடையாளம் எதுவுமில்லை
அந்தச் சாம்பலில்
எந்த மரமென்று.

ரயிலை ரசிப்பதில்லை
ஆளில்லா ரயில் பாதையை
கடக்கும் எவரும்.

பேசுகிறார் கடவுள்
நம்மோடு
திக்கித்திணறும் குழந்தை.

வீடுகட்டுவதற்காக
இடித்து வாரப்பட்டது
மழலைகளின் மணல்வீடுகள்.

புதுவண்டி. **ரவீந்திரன்,**
**சோளிங்கர்.**

● தீயணைப்பு ஊழியருக்கு
மடியில் நெருப்பு
நான்கும் பெண்கள்.

பாட்டி வீட்டிற்கு செல்கின்றன
குழந்தைகளுடன்
பொம்மைகள்.

கரம் பற்றினாள்
மோதிரங்களை மாற்றிக்கொண்டு
வளையல் காரனை.

மீன்களாக தெரியவில்லை
காதலியின் கண்கள்
மீனவ காதலனுக்கு.

பூனை குறுக்கே
சகுனம் சரியில்லை
எலிக்கு.

**மீரா மலர்விழி,**
கனடா.

- எடைபோட முடியவில்லை
கனக்கிறது
மனசு.

இணையவில்லை
ரயில் பயணங்களில்
தண்டவாளம்.

கையில் காகிதக்கப்பல்
நினைவு வெள்ளத்தில்
மூழ்கியது மனது.

தட்டிக்கொடுத்தேன்
பாடியது
பழைய ரேடியோ.

புதிதாய் பூக்கிறது
ஒவ்வொரு நாளும்
உனது புன்னகை.

கொள்ளிடம். **காமராஜ்,**
**திருச்சி.**

● பிறக்கும் வரம்கேட்டது
பட்டுப்பூச்சி
பருத்திச் செடியாய்.

வெள்ளம் வடிந்தது
தலை துவட்டுகிறது காற்று
நாணலை.

பாட்டியின் சுருக்குப்பையில்
நிரம்பிக் கிடக்கின்றன
அறிவுரைகள்.

புதுநகர்
புது குடியிருப்புகள்
பழைய குளம்.

நள்ளிரவில்
மழலைக்குரல்
பூனை.

இரா.தயாளன்,
திருவாய்நல்லூர்.

- நிற்க முடியவில்லை
காலோரம் மணலை
உருவிப்போகும் அலைகள்.

நேற்று மழை
பெயரற்ற பூச்சிகள் வட்டமிடும்
இன்றிரவு தெருவிளக்கின்கீழ்.

தூசு படிந்த நீரில்
விரிந்து சுருங்கும் வானம்
கல்லெறிந்த இடத்தில்.

திறந்த சன்னல்
காற்றோடு சேர்ந்து நுழைகிறது
பனிச்சாரல்.

அந்த மரம்
இப்படி பூத்துகுலுங்கினால்
எப்படி கடந்து செல்வது?

நின்றிருந்த கார் கண்ணாடியில்
நகர்ந்து கொண்டிருந்தது
மேகம்.

இருளும் வானம்
ஒவ்வொன்றாய் முளைக்கும்
நட்சத்திரம்.

பேருந்து வளைவுகளில்
திடீரெனக் காணாமல்போகிறது
நிலா.

சுபஸ்ரீ சுந்தரம்,
சிங்கப்பூர்.

● கைவசம் வந்ததெல்லாம்
நிரந்தரமல்ல
விரலிடுக்கில் வழிந்தது நீர்.

காற்றடித்து
விண்மீன்கள் அசைகின்றன
குளத்தில்.

இருள்சூழ
விட்டுப் பிரிந்தது என்னை
நிழல்.

விற்ற வீட்டில்
காலிசெய்ய முடியாமல்
நினைவுகள்.

இருண்ட அறை
குழல்விளக்கின் மேல்
குருவிக்கூடு.

மாபெரும் சபை
மாலைகள் விழ
பலி ஆடு.

கோனூர். **வைரமணி.**

- குழந்தைகள் சோறுட்டி
புரையேரியதில்லை
பொம்மைகளுக்கு.

முனைமழுங்கி பூத்தது
வாடகைவீட்டில் நட்டுவளர்த்த
ஊசி மல்லிச்செடி.

அரசமரத்தடியில்
கண்ணயர்வு
கனவில் அந்தப்புரம்.

கஞ்சிமடிப்பு வாசம்
காலடி சுற்றுகிறது
பசித்த நாய்கள்.

சுசி மாணிக்கம்,
சேலம்.

● புல்லரிக்கிறது
புல்லுக்கு
ஊர்ந்துவரும் பனித்துளி

அழகாய்த்தானிருக்கிறது
தலைவிரி கோலமாய்
தென்னை.

நீரில்லா ஆறுதான்
நிறையவே கிடைக்கிறது
மணல்.

மீதமிருந்தது
உழுதவன் கணக்கில்
கடனும் வட்டியும்.

செ.ச.பிரபு,
நெல்லை-6.

● பெருமழையில்
முளைக்கின்றன குடையுடன்
காளான்கள்.

மரங்கள் அசைகின்றன
வருகின்ற காற்றை
வீசுவது யாரோ.

மரங்களற்ற சாலை
புழுதி வாரியிறைக்கிறது
காற்று.

உச்சி வெயில்
தலை சாய்ந்தேயிருந்தது
சூரியகாந்திப்பூக்கள்.

இராசா.ஆனந்தன்,
வேதாரன்யம்.

● தினை விதைத்தவன்
புல் அறுத்தான்
களைகள் அதிகம்.

ஊர்கூடி தேரிழுத்தும்
வந்து சேரவில்லை
பாதிவழியில் சக்கரம் பழுது.

அழகான மலரில்
திருஷ்டிப்பொட்டு
கருவண்டு.

ஒற்றைக்கால் தவம் கலைத்தது
தாமரை மொட்டு
ஆதவன் வருகை.

ஊசிக்கு அழும் குழந்தை
மருத்துவமனை வாசலில் மகிழ்வாய்
பலூன் விற்பவன்.

**க. இராமஜெயம்,**
சத்துவாச்சாரி.

● காய்த்தமரம் கல்லடிபடும்
பாவம் சருகு
உதிர்ந்தும் மிதிபடுகிறது.

குடித்தவன் ஊரில்
உடைந்து கிடந்தது
மது பாட்டில்.

கரை ஏற முடியாது
தவிக்கும்
நிலா.

நிற்க நேரமே இல்லை
ஓடிக்கொண்டேயிருக்கிறது
கடிகாரமுள்.

நா.கி. பிரசாத்,
கோவை.

● வீடு முழுக்க
விற்காத பாய்கள்
வெறுந்தரையில் உறக்கம்.

மழையில்
தீ குளித்தான்
நிலம் விற்ற விவசாயி.

கட்டவிழ்க்கப்பட்ட நீதிதேவதை
காத்திருக்கிறாள்
கண் சிகிச்சை முகாமில்.

குண்டும் குழியுமான சாலை
சீராகச் செல்கிறது
ஊழல்.

குழிதோண்டி மண் அள்ளி
விவசாய நிலமெல்லாம்
வீடுகள்.

**அமரன்**

- தென்னங் குருத்தோலை
வானின் நீலவண்ணம் வழித்து
யாதெனத் தீட்டுமோவியம்.

உகுக்கின்ற வீழிநீரில்
தெரிவதில்லை உவப்பும் துயரும்.. ஆனால்
யாரோவல நீர்.

மணிப்பச்சை விழுங்கினை
மரமெல்லாம் பொல்லென்று பற்றி
எரிவதற்கா குல்மொகர் நீ?

மென்காற்றும் புயலும்
தேர்ந்தெடுத்து உடன்வழங்க கொட்டிக்
கிடக்கின்ற சொற்கள்.

உறங்குவேன் பிறிதொருநாள்
விழிமுன்னம் இப்போது வானின்
இழிந்திருக்கும் மழைத்துளிகள்.

பகையல, நட்புணர்வாம்
நட்பன்றிப் பகையோ.. இவர்
உறவெலாம் புரியவா நான்?

முட்டி மோதியழப்
பெண்ணுக்குத் திராணி? புரிகிறதா,
மௌனத்து விசும்பல்?

மாமியார் பயம்
வீட்டுக்குள் தயங்கிநடக்கும்
மருமகள் கொலுசு.

- **மூர்த்தி கிருஷ்ணன்**, வேலூர்-2.

நொடிப்பொழுதில்
என்னைக் கடக்கும் விமானம்
சிட்டுக்குருவி.

- **சத்தியதாஸ் சக்திவேல்.**

குளத்தில் கல்லெறிந்தவன்
கனவில்
பெரியபெரிய வட்டங்கள்.

- **வினுராஜி.**

கிணற்றில் நிலா
முகம் கழுவாமல்
வீடுவந்தேன்

- **அ.முரளி**, துக்காப்பேட்டை.

உழவனுக்குப் பாராட்டு
துண்டு போர்த்தியது
பருத்திச்செடி.

- **கோவிந்தராஜன் பானு**, கும்பகோணம்.

நாசி நுகர்ந்த மணம்
இருளிலும் இருப்பைச்சொன்னது
மல்லிகைச்செடி.

- **தீபாசெண்பகம்.**

உச்சியில் நடக்குது
குச்சியில் நெசவு
பறவைக்கூடு.

- **தி.ஞானபாலன்**, சென்னை.

சிறிய எறும்புக்கும்
சேர்த்து தான்
இந்த பெரிய வானம்.

- **அன்பழகன் செந்தில்வேல்**, திருநெல்வேலி.

மூச்சுத் திணறல்
மண்மூடிய இலைகள்
சாலையோரச் செடி.

- **கண்ணன்சேகர்,** திமிரி.

மாலை நேரத்து மழைத்துளிகள்
ரசிக்க மறுப்பு
நடைபாதை வியாபாரிகள்.

- **சி.குருநாதசுந்தரம்.**

பள்ளி விடுமுறை
மணக்கிறது
கூட்டாஞ்சோறு.

- **கு.லஷ்மணன்,** கும்பகோணம்.

சிலநேரம்
உன்னைவிட அழகு
உன் நிழல்.

- **வசந்தராஜா,** நெய்வேலி.

ஈரமில்லா மழை
அடித்துச்சென்றது
ஏழை குடிசையை.

- **ரா.கி.இராமகிருஷ்ணன்,** சேலம்.

ரசித்துப்பார்த்தால்
அழகு தான்
திருஷ்டிப்பொம்மை.

- **இரா.இரவி,** மதுரை.

அமைதியான தேர்வறையில்
அடிக்கடி பேசியது
நாற்காலி.

- **கவியரசன்,** சென்னை–127.

ஒற்றைக் காலில் தவம்
பூமியெங்கும் மரங்கள்
புத்தனைத் தேடி.

- **கூரா.அம்மாசையப்பன்,** சேலம்–30.

மின்னல் வெட்டியகிளை
உதிர்ந்த இலை மின்னும்
மற்றுமொரு மின்னலில்.

- **குமரகுரு.**

சேற்று வயலில்
நண்டின் கால்தடம்
அழித்துநடக்கும் பறவைகள்.

- கன்னிக்கோயில். **இராஜா.**

நீண்ட கால்கள்
வீடு திரும்பும் அப்பா
இரவு விளக்கின் நிழல்.

- **பல்லவிகுமார்,** விருதாச்சலம்.

நீர்விட்ட
ரகசிய மூச்சு
நீர்க்குமிழியாய்.

- **இவானா,** திருச்சி–8.

மகள் வரைந்த மரம்
வந்து செல்கிறது
குருவிகள்.

- **ஷாகுல்ஹமீது,** திருப்பாளைக்குடி.

வாய்க்காலில்
சலசலத்துப பாய்கிறது
நடவுப்பாடல்.

- **வெற்றிப்பேரொளி,** திருக்குவளை.

குழாயடிச் சண்டை
தொலைக்காட்சிப் பெட்டியிலும்
விவாத மேடை.

- **அ.ஜெயக்குமார்,** சேலம்.

செடியில்
ஊசிப்பட்டாசுகள்
சிவப்பு மிளகாய்கள்.

- **ந.க.துறைவன்,** சத்துவாச்சாரி.

எங்கேயோ வேட்டுசத்தம்
அதிர்கிறது
இரும்புக்கதவு.

- **தனசேகர்,** மாமண்டூர்.

தண்ணீரை கொட்டியபடியே செல்லும்
லாரியில் எழுயிருக்கிறது
குடிநீரை வீணாக்காதீர்.

- **ஸ்டெல்லா தமிழரசி.**

✉ '2014-ஆண்டு மலர் மற்றும் ஹைக்கூ சிறப்பிதழ்-2015' எனும் குறிப்போடு பெருகி வழிகிற 'அருவி'யின் சென்ற இதழில் கடிதப் பகுதியில் - சேலம் பொன் குமார் அவர்கள், **"அருவி கவிதைகளின் முகாமாகவும் கூடாரமாகவும் விளங்குகிறது"** என முன்மொழிந்திருப்பதை நான் வழிமொழிகிறேன்.

இதழின் அட்டையிலே, கவிஞர்.ந.சீனிவாசனை, கவிதை எழுதவிடாமல் அடிக்கடி கவனம் கலைக்கிற தவிட்டுக் குருவியே கவிதையாகியிருப்பது அழகு-தவிட்டுக்குருவி மட்டும் தானா? ஊஞ்சலும்-காற்றும்-வானமும்-மஞ்சள் நிறப் பட்டாம் பூச்சியும் அல்லவா கவிதையின் கவிதைகளாய் கவனம் ஈர்க்கின்றன.

தலையங்கத்தில் இதழாசிரியர் ஒரு தவிப்போடு, அருவி இதழ் தாமதமாய் வருவதைப் பற்றிய வருத்தத்தை, தமது சுயத்தை இழக்காமல் முன் வைக்கிறார். இதழ் தாமதமாய் வந்தாலும் தரமாய் வந்திருக்கிறது என்பது தானே உண்மை! **தரத்தை அடையக் காத்திருக்கும் தரமானவர்கள், தாமதத்தைப் பொருட்படுத்தமாட்டார்கள்.** (1968 இல், **'கண்ணதாசன்'** என்கிற இலக்கியஇதழ் வெளிவந்தபோதும், இது போலத்தான் நேர்ந்தது. கவிஞர் கண்ணதாசன் அவர்களும் தமது தலையங்கத்தில், இதழின் தாமதத்துக்கு இரங்கி, இறங்கி எழுதியது இப்போது எனது நினைவுக்கு வருகிறது)

பாவேந்தர் அவர்களோடு மொத்தம் 126 கவிஞர்களின் கவிதைகளைத் தாங்கிப் பொழிகிறது சென்ற அருவி இதழ். தமிழின் பெருமை கூறுகிற மரபோடு தொடங்கியிருக்கிறது அருவி. உயிர் எனும் தமிழை உளமார பாவேந்தரும், கோ.மோகனரங்கனும், சா.சம்பத்தும், நவீன்குமாரும் உயர்த்தியிருக்கிறார்கள். **'கிடந்தாலும் கனிமம்போல் கிடத்தல் வேண்டும்'** என்கிறார் இராம.இளங்கோவன்.

கவிஞனின் இறுதி ஊர்வலத்தில் கலந்துகொள்கிற அவனது கவிதையே, கல்லறையிலிருந்து எழுகிற சத்தமாகக் கேட்கிறது கவிஞர் கோசின்ராவுக்கு. கவிஞன் இறந்தாலும் கவிதை இறப்பதில்லையல்லவா? - இந்த நல்ல கவிதையை, கோசின்ராவின் 'பூனையின் கடவுள்' நூலில் இருந்து எடுத்து வெளியிட்டுள்ள ஆசிரியர் ந.சீனிவாசன் அவர்களைப் பாராட்டாமல் இருக்க முடியுமா?

**மையப்புள்ளி**

-அமுதபாரதி.

அப்படியே, **'ஆகவே நானும்'** எனும் நூலில் இருந்து தேவேந்திர பூபதியின் கவிதையையும், **'ஒரு புன்னகையின் தொலைவில்'** நூலில் இருந்து சபிதாவின் கவிதையையும் நன்றி கூறி வெளியிட்டிருக்கிற சீனிவாசனுக்கு நாமும் நன்றி கூறலாம்.

சுவடுகளின் பின்னால் அலைவதை விடவும் **'சுவடுகளைத் துறத்தல்/ஞானத்தின் தொடக்கம்'** என்று முத்தாய்ப்பாய் முடிக்கிற சுந்தர்ஜி பிரகாஷ் தமது கவிதையின் மூலம் **'ஆசை அறுமின்கள் / ஈசரோடாயினும் ஆசை அறுமின்கள்'** என்கிற திருமூலரின் வாக்கினை நமக்குள் நினைப்பேற்படுத்துகிறார். இதழின் 18ஆம் பக்கத்தையும் 19ஆம் பக்கத்தையும், **'உள் துளைப்பா'**க் காணத்தக்கதான தமது (ABSTRACT) கவிதைகளால் ஆட்படுத்தியிருக்கிற றியாஸ் குரானா, தமது மனத்தின் அவஸ்தைகளை மரணிக்கமுடியாத கவிதைகளாக்கியிருப்பது பாராட்டுக்குரியது. **'மானின் புள்ளிகள்போல் மழையின் துளிகள்'** விழுவதாகக் கூறுகிற அவருக்கு எனது வாழ்த்துப் புள்ளிகள் மழையாகட்டும்.

**'உண்மையைத் தேர்வு செய்வதல்ல/நமது நோக்கம்/உண்மையாய் ஆவது தான்...'** என முடிகிற கவிதையின் மனக்காரர் கவிஞர். வி.சீனிவாச கோபாலன். **'புதர் மண்டிக்கிடக்கிற அந்த நிலம் நல்ல விலை வரும்போது மொட்டையடிக்கப்படலாம்'** என நகைச்சுவையாக மட்டுமின்றி, அழுத்திக் கிள்ளும் நகத்தின் கூராகவும் விளங்கும் கவிதையால் குத்துகிற கவிஞர் வினையன்; **'வயிறு நிறைய மேய்ந்த லட்சுமி/ தண்ணீர் குடிக்கிறது'** என்று, லட்சுமி என்கிற பெயர்க் குறியீட்டால் பசுவைச் சுட்டுகிற, தமது ஊரில் ஓடும் ஆற்றின் ஊற்றுக்கண்ணாய் திகழ்கிற கவிஞர் குயலவன் அன்றில்; தான் காகிதத் தோணியாக மாறிய விதத்தைக் கூறி, அது மூழ்கும் காட்சியினைத் தானே ரசித்து, **'இதைத் தவிர ரசிப்பதற்கு என்னிடம் வேறு காட்சிகளில்லை'** எனத் தத்துவார்த்தமாகத் தமது கவிதையை முடிக்கிற கவிஞர் ஜெம்ஸத் ஸமான்; வீசி எறியப்படும் சில்லரைகள் பருக்கைகளாய் உருமாறித் தெரிவதாகப் பாடுகிற கவிஞர் பிரமநாதன்; மரணத்தைப் பற்றிப் படிம அடுக்குகளாய் கவிதை வரிகளை அடுக்கத் தெரிந்திருக்கிற கவிஞர் எல்.ப்ரியா கண்ணன்; **'மண்ணை பொம்மையாக / பானையாக / செங்கல்லாக மாற்றிய / மனிதனின் கண் முன் / தன்னை மரமாக மாற்றிக் கொண்டது மண்'**

எனக்கூறி நகைக்கிற கோபமுறுகிற கவிஞர் குமரகுரு அன்பு. தன்னை நிரம்பாத கோப்பையாக நிற்பவராகவே நினைக்கிற - நிரந்தர மனிதனாக இன்றி நிறம் மாறிக்கொண்டே இருக்கிறவராக உணர்கிற - **'எப்போதும் சூரியன் எதற்கு? இரவும் வேண்டும்'** என்று தமது கவிதையை முடிக்கிரவராக விளங்கும் கவிஞர் துறவி; **'கொடியில் காற்றாடும் ஆடைகள் நம்மை எள்ளிச் சிரிக்கின்றன'** என்பதன் மூலம் யதார்த்தமானதோர் உண்மையை நமக்கு உணர்த்துகிற கவிஞர் நீலமணி முதலியவர்கள் முதல், கவிஞர் மகுடீஸ்வரன்.மு ஈறாக மொத்தம் எழுபத்தெட்டு கவிஞர்கள் தமது புதுக்கவிதைகளை அழகுறப் படைத்திருக்கிறார்கள். (எல்லாருடைய பெயரையும் எழுதலாம்தான்... சோதரர் பூ.அ.இரவீந்திரன் ஒவ்வொரு கவிதையின் உள் நுழைந்து, அவற்றில் உள்ளதை தமது உள்ளத்தை வெளிப்படுத்துவதுபோல் விளக்கலாம் தான்... இடம் நீளுமே.

ஒவ்வோர் அருவி இதழிலும் மரபு - புதிது ஆகிய கவிதைகளுக்கு ஈடாக ஐக்கூ கவிதைகளுக்கும் இடமளிக்கிற கவிஞர் ந.சீனிவாசன், ஆண்டு மலருடன் ஐக்கூ சிறப்பிதழையும் இணைந்து வெளியிட்டிருக்கிறார்.

**'ஐக்கூ தனிக்கலை, நெறி, பேரழகும் கூட'** என்கிற கவிஞர் ந.விச்வநாதன் அவர்களின் முன் குறிப்போடு தொடங்குகிறது **'ஐக்கூ வாசம்'**... மரபு புதிது என எழுதுவதோடு, இப்போது பெரும்பான்மையாக ஐக்கூவிலேயே ஊறி, ரசித்து ரசித்து ஆழ்ந்திருக்கிற எனது ஐக்கூக்களோடு நாற்பத்தோரு கவிஞர்களின் ஐக்கூ படைப்புகள் நமக்கு கிடைத்துள்ளன.

**'வயலை விற்ற இரவு / பறவைகளின் குரல்கள் / வேறாய் ஒலித்தன'** என்கிற கவிஞர் ந.விச்வநாதனின் ஐக்கூ மனத்துள் நுழைந்து, வெகுநேரம் வேறு சிந்தனையற்று நம்மை ஆழ்ந்திருக்க வைத்துவிடுகிறது! **'இதுதான் ஐக்கூ'** நூல் எழுதிய லீலாவதி அம்மாவுக்குப் பின்னர், ஐக்கூ பற்றிய நூல்கள் படைத்து வருகிற கவிஞர் மித்ரா அம்மையாரின் **'பாடும் தவளை / தப்பும் தாளம் / வாய் நிறைய நீர்'** என ஐக்கூவாகவும், ஏன் சென்ரியூவாகவும் கூட விளங்குகிற தமது இனிய கவிதை தொடங்கி எட்டு கவிதைகளில் நம்மை இணைத்துவிடுகிறார்.

ஆக்ஸிஜன் என்கிற பிராண வாயுவைத் தருவதோடன்றி, ஊர் சுற்றிக் காட்டவும் தெரிகிறதாமே காற்றுக்கு! கவிஞர் வீ.தங்கராஜ் அவர்களின் **'உதிர்ந்த இலைக்கு ஊர் சுற்றிக் காட்டுகிறது / காற்று'** எனும் கவிதை வழி நமக்குத் தெரிகிறது அது! **'காடு வரையும் முன் / துளிர்த்தது / பென்சில் நுனியில் பச்சை'** என்கிற கவிஞர் வலங்கைமான் நூர்தீன் வரிகளில் எத்துணை கலா பூர்வமான பார்வை! **'காலியான மீன் தொட்டியில் / நீந்துகிறது / மகளின் நினைவுகள்'** என்றெழுதும் கவிஞர் தா.துளசியின் நினைவுகளில் நாமும் இணைந்துகொள்கிறோம்.

**'அலைமோதும் கூட்டம் / பாட்டியின் மாக்கோலத்தின்மேல் / அன்னதானம்'** என்கிற கவிஞர் வே.சுப்ரா, **'மரத்திலிருந்து சற்று முன்னர்தான் இறங்கியது / அந்திச் சூரியன்'** என்கிற தம்பி, கவிஞர் இரா.தயாளன் **'பொழுது விடிந்தும் / படுத்திருந்தது / மரத்தின் நிழல்'** என்கிற கவிஞர் சுசி.மாணிக்கம் **'புல்லை மேய்ந்த இடத்தில் / வட்டம் வரைந்திருந்தது / கயிற்றில் கட்டிய மாடு'** என்கிற கவிஞர் பட்டியூர் செந்தில் குமார், **'இரவு நேர மழை / உறங்காமல் சிறுவன் / கட்டிய மணல்வீடு'** என்கிற கவிஞர் கண்ணன் சேகர், **'காட்டுப் புதரில் / எட்டி உதைத்த காலின் / எலும்பு'** என்கிற கவிஞர் முகவை முனீஸ், **'உன் பெயரைச் செதுக்கினேன் / சிற்பமாயிற்று / கல்'** என்கிற கவிஞர் வசந்தராஜா, **'நடப்பதுபோல் தெரிகிறது / காற்றில் அசையும் / யானையின் படம்'** என்கிற அருணாச்சல சிவா, **'மழலைச் சொல்லின்றி / வேடனின் வீடு / பறவைகளின் சாபம்'** என்கிற மு.ஜெயலட்சுமி, **'காலகாலம் நிலைத்திருக்கும் / கட்டடம் தேக்கென்றார் / உள்ளம் தொட்டதிலே மணல் வீடு'** என்கிற கவிஞர் அமரன் முதலிய பலர் நெஞ்சைத் **'தொடுகிற'** கவிதைகளைப் படைத்திருக்கிறார்கள். இவர்களைப் பாராட்டுவதில் எனது இதழ்கள் இனிப்புறுகின்றன.

இறுதியாக ஒன்று: நாம் படைக்கிற படைப்புகள் மரபு - புதிது - ஐக்கூ - நவீனத்துவம் - பின் நவீனத்துவம் போன்று எந்த வகை சார்ந்ததாகவும் இருக்கலாம்... அவற்றின் மையப் புள்ளி, **'மனத்தைத் தொடுதல்'** என்பதாகத்தான் அமைகிறது. நாம் அந்த மையப் புள்ளியை நோக்கி நகர்வோம்... ஆமாம்.

**'எடுத்த காகிதத்தில் எழுதவில்லை**
**ஏற்கெனவே கவிதை இருந்தது**
**தூய்மையான வெண்மை'.**

## காற்றில் மிதக்கும் கவிதைச் சிறகுகள்

–க. இந்திரசித்து.

✉ குறுங்கவிதைகள் இன்னும் இயற்கைச் சார்ந்த பாடுபொருள்களிலிருந்து விடுபடவில்லையோ என்று எண்ணத் தோன்றுகிறது. 164 பக்கங்கள், 124 கவிஞர்கள், நூற்றுக்கணக்கான கவிதைகள் எவ்வளவு பெரிய மனித முயற்சி என்று வியக்கிறேன். அருவியில் (22, 23) உள்ள கவிதைகள், அரசியல், சமுதாயம், உளவியல், இயற்கை, காதல், காமம் போன்ற அனைத்துத் தளங்களிலும் தடம் பதித்துள்ளன. அகவயமான சில கவிதைகளில் இருண்மை இருந்தாலும் பெரும்பாலான கவிதைகளில் புறமே ஒளிர்கின்றது. நீண்ட நெடுங்காலமாகவே இந்திய மரபில் அறிவுத் தேடல் இருந்து கொண்டே இருக்கிறது. அத்தேடல் கருத்து முதல்வாதமாக இருக்கலாம் அல்லது பொருள் முதல்வாதமாக இருக்கலாம். எவ்வாறெனினும் தேடல் புத்தர் காலத்திலிருந்து தொடர்ந்து வந்துகொண்டே இருக்கிறது. துறவியின் கவிதை (ப.34) இதற்கு மிகச் சிறந்த ஓர் எடுத்துக்காட்டாகும். **எனக்குள் / இட்டு நிரப்ப / எதையேனும் தேடுகிறேன்/ எதுவும் கிடைக்கிவில்லை / நிரம்பாத / கோப்பையாகவே நிற்கிறேன்** (ப.34) என்ற தொடக்கமே நங்கூரமிட்டது போல் நம்மை இழுத்துப்பிடித்து நிறுத்தி உரையாடலைத் தொடங்குகிறது. மனம் எதிலும் அமைதியடைய மறுக்கிறது. கிருட்டினனின் கீதையில், புத்தனின் புத்திமதியில், ஆதிசங்கரரின் அத்வைதத்தில், உபநிடதங்களில் மனிதனுக்கு அறிவு (ஞானம்) கிடைக்கவில்லை. மனித மனதிற்குள் ஆட்சி செய்யும் நன்மை, தீமை என இரண்டையும் கவிதை பகுப்பாய்வு செய்கின்றது. இருமை எதிர்வுகளில் x மனித வாழ்க்கையை கவிதை மட்டமைக்க முயல்கிறது. சலவை x அழுக்கு, அரசுன் x அவதார புருடன், பூக்கள் x கற்கள் என்னும் சிந்தனைகளால் அகமனதை கவிதை அலசுகிறது. ஆன்மீக உலகில் அடிக்கடி எழுப்பப்படும். 'நான் யார்'? என்ற கேள்வியை எழுப்பி, பிணமா? விதையா? என்ற விடையைத் தர முயல்கிறார். இன்பம், துன்பம் இருப்பது தான் மானிடவாழ்வு என்ற முடிவைத் தருகிறார். விடியலும் வேண்டும், அத்தமனமும் வேண்டும். பகலும் வேண்டும் இரவும் வேண்டும் என்ற முடிவுக்கு வருகிறார் கவிஞர். ஆனால் இயற்கையாக வரும் துன்பங்களை நாம் ஏற்றுக்கொள்ளலாம். ஆனால் செயற்கையாக, வேண்டும் என்றே, திட்டமிட்டு ஏற்படுத்தப்படும் துன்பங்களை நாம் ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும் இப்படித்தான் இருக்கும், எதுவும் மாறாது.

அனைத்தையும் அப்படியேதான் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது மனித குல வரலாற்றைப் பின் நோக்கி இழுப்பதாகிவிடும். தமிழர்களின் பொதுப்புத்தியில் பதிந்து போன சில கருத்துக்கள் கவிதையில படிந்துள்ளது. ஐம்புலன்களை அடக்குவதே அறம் என்று கூறிய அதிகார வர்க்கம் மற்றவர்களின் புலன்களை ஒடுக்கி வைத்துள்ளது. புத்தர் முதல் வள்ளுவர் வரை, இந்த ஆளும் வர்க்கத்தின் அறத்தை வரவேற்றும் போற்றியும் பாராட்டியுள்ளனர்.

ஒருமையில் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து (குறள் : 126)

என்று வள்ளுவர் கூறுகிறார். ஐம்புலன்களின் அட்டகாசம் நின்ற பாடில்லை என்கிறார் கவிஞர். புலன்களை எதற்காக அடக்க வேண்டும்? துய்ப்பது தானே புலன்களின் இயல்பு. புலன்களை அடக்குவதால் ஒரு சமூகம் முழுவதும் உளப்பிறழ்வு கொண்ட சமூகமாக் மாறிவிடக் கூடும் (தமிழ்ச்சமூகம் இதற்கு மிகச்சிறந்த சான்று) மகிழ்வதும், கொண்டாடுவதும், துய்ப்பதும் தான் இயல்புநிலை வாழ்க்கையாகும். இதற்கு மாறான அறத்தை முதலாளித்துவமும் வருணத்துவமும் ஏற்படுத்தியுள்ளன. மிருகங்கள் பசி, தாகம், காமம் ஆகியவைகளை இயல்பாக வெளிப்படுத்துகின்றன. மனிதனும் மிருகம் தானே ஆடை அணிவதாலும், மொழியைப் பேசுவதாலும் விலங்குணர்வு மாறிவிடப் போவதில்லை. ஐம்புலன்களைப் பட்டினிப்போட்டு அடக்கினால் அது வெடித்துக் கிளம்பும். எனவே ஐம்புலன்களை அடக்குவதற்கு மாறாக ஐம்புலன்களை ஒழுங்குபடுத்திக் கொள்ளலாம்: ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரலாம். இது தான் மனித குலத்திற்கு ஏற்ற வழி முறையாகும்.

கடவுள் என்னும் கற்பனையான கருதுகோள் வரலாற்றின் மீது நிகழ்த்தியுள்ள வன்முறைகள், கொலைகள், அழிவுகள், மண்மேடுகள், சாம்பல் மேடுகள் நம்மைத் திகைக்க வைக்கின்றன. அமுதபாரதி ஓர் அழகான சென்ட்ரியு கவிதையை யாத்துள்ளார். **தொழுது முடித்தவர்கள்/திரும்பி வருகிறார்கள்/ காலணிகளைத் தேடி** (ப.105) என்னும் கவிதை ஒரு மெல்லிய நகைச்சுவையை ஏற்படுத்துவதோடு ஆயிரம் ஆயிரம் கேள்விகளையும் அது எழுப்புகிறது. கடவுளைக் கோயிலுக்குள் சென்று வணங்கியவர்களின்

காலணிகள் காணாமல் போய்விட்டன. பக்தர்களின் செருப்பைக் கூட காப்பாற்ற முடியாத கடவுள் மனிதர்களை எப்படிக் காப்பாற்ற முடியும்? என்ற வினா எழுவது இயல்பாகின்றது. ஒன்றுமில்லாத இதற்காகவா வரலாறு செங்குருதியில் கைநனைத்து வந்துள்ளது என்பதை எண்ணிப்பார்த்தால் நெஞ்சம் பதறுகிறது. அஃதே போல், **கடவுள் சன்னதி/கண்ணில் நிற்கும்/ புதுச்செருப்பு** (ப.112) என்னும் கவிதையும் கடவுளின் இருப்புக் குறித்து கேள்வி எழுப்புகின்றது. மனிதனுக்குத் தெளிவாகத் தெரிகின்றது. நாம் வணங்கும் தெய்வம் புதுச்சேருப்பைக் கூட காப்பாற்றித் தர இயலாது என்று. அதன் மறுதலையாக கோவில் வாசலில் உள்ள புதுச்செருப்பைத் திருடிப் பிழைக்கும் மனிதர்களை கடவுள் ஏன் படைத்தான் என்ற ஐயம் எழுகின்றது. தாங்கள் சுரண்டுவதற்கு கடவுளையும் ஒரு கேடயமாக பயன்படுத்திக் கொள்ளும் ஆளும் வர்க்கத்தின் தந்திரத்தை எப்படிப் புரிந்து கொள்வது? அடிவாங்கிக் கொண்டே அடிப்பவனை வாழ்த்திப்பாடும் தமிழர்களின் அடிமை உளவியலை எப்படிக் கட்டுடைப்பது என்பது தான் புரியவில்லை. திரு.வே.சுப்ராவின் ஒரு கவிதை மிகுந்த ஏமாற்றத்தை ஏற்படுத்தியது. கலை இலக்கியம் யாவும் மக்களுக்காவே கலை கலைக்காக அல்ல. அழகியல் தேவைதான். ஆனால் அது மனிதம் என்பதை மறந்ததாக இருத்தல் கூடாது. **அலைமோதும் கூட்டம்/ பாட்டியின் மாக்கோலத்தின்மேல்/அன்னதானம்** (ப.113) என்னும் கவிதை பசித்த மானிடக் கூட்டத்தினால் பாட்டியின் கோலம் அழிந்து விட்டது என்று வருந்துவது ஏற்புடையதாக இல்லை. நாம் மனிதர்களின் பக்கமே நிற்கவேண்டும். மனிதன் என்பதைத் தவிர மகத்தான பொருள் உலகத்தில் இல்லை என்கிறார் உருசிய நாட்டின் எழுத்தாளர் மக்சிம் கார்க்கி **பாட்டியின் கோலம் அழிந்தது/மகிழ்ச்சி/ அனைவருக்கும் அன்னதானம் கிடைத்தது** என்று எழுதப்பட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஓவியம் நல்லதுதான். அதற்காக கண்களை விற்கமுடியாது.

காவனூர் சீனிவாசன் அவர்களின் இலக்கிய முயற்சியைப் பாராட்டுவோம்; வாழ்த்துவோம்; வரவேற்போம்.

●

# ☐ : வந்து சேர்ந்தன : ☐

## ● இதழ்கள்

- மகாகவி
- கல்வெட்டு பேசுகிறது
- முல்லைச்சரம்
- தமிழர் முழக்கம்
- படைப்பாளர்களின் குரல்
- திருஅசுபதி
- வளரி
- பாவையர் மலர்
- பயணம்
- கனவு
- மீட்சி
- புதுவைப்பரணி
- சிகரம்
- செங்காத்து
- ஏழைதாசன்
- சிரிப்பு ரோஜா
- நீலநிலா
- உயிரோசை
- சங்கு
- பொதிகை மின்னல்
- தமிழ்த்தாராமதி
- அறிவின் வழி
- நற்றினை
- பொருளியல் உரிமை
- ஆலம்பொழில்

## ● புதிய வரவுகள்

| | | | |
|---|---|---|---|
| ● படிகம் | நவீன கவிதைக்கான இதழ் | ரோஸ் ஆன்றா<br>4/184, தெற்குத் தெரு,<br>மாடத்தட்டுவிளை<br>வில்லுக்குறி 629 180.<br>செல் : 98408 48681 | தனி இதழ் ரூ.10<br>ஆண்டுக்கு ரூ.100 |
| ● மாதவம் | மாதஇதழ் | அ.மினி<br>3/46, அ.தெற்குத் தெரு,<br>இராசாக்கமங்கலம்,<br>குமரிமாவட்டம் - 629 502.<br>செல் : 9790307111 | தனி இதழ் ரூ.15<br>ஆண்டுக்கு ரூ.200 |
| ● கூடு | இலக்கிய காலாண்டிதழ் | வண்ணை சிவா<br>9, வணிகவளாகம் மாவுமில்,<br>மாதவரம் பால்பண்ணை,<br>சென்னை 600 051.<br>செல் : 99404 07930 | தனிஇதழ் ரூ.10<br>ஆண்டுச்சந்தா ரூ.50 |
| ● சாரல்கீதம் | இலக்கியம் மற்றும் சமூக விழிப்புணர்வு இதழ் | கவிஞர். மீரா சுந்தர்<br>2470, தெற்கு ராஜவீதி,<br>புதுக்கோட்டை 622 001.<br>செல் : 99761 23535 | தனிஇதழ் ரூ.20<br>ஆண்டுக்கு ரூ.200 |
| ● முறுவல் | மரபின் முகவரி | சு.சா.அரவிந்தன்<br>விநாயகா நிவாஸ்,<br>4வது குறுக்குத் தெரு, பிரிவு<br>தணிகாசலம் நகர்,<br>பொன்னியம்மன் மேடு (அஞ்)<br>600 110.<br>செல் : 98402 91716 | தனிஇதழ் ரூ.10<br>ஆண்டுக்கு ரூ.50 |

நூல்கள் அறிமுகம் : அடுத்த இதழில்

• எந்தக் குறிப்புகளுமற்று
காணாமல் போன
கவிதையொன்றில் தான்
நான்
தொலைந்திருக்கிறேன்.

ஞாபகத்திற்கு சிக்கவில்லை
எந்தவொரு வார்த்தையும்.

எல்லாவற்றையும்
எப்போதும் எழுதிவிடுகிற
விரல் நுனிகளுக்கு
அடையாளம் காட்டவியலாமல்
அதற்கும்
ஞாபக மறதிகள்.

விரட்டாமல்
விட்டுவைத்திருக்கிற
சொற்கள் மட்டும்
அடிக்கடி வந்துபோகிறது.

எதிலும் மிதக்கமுடியாமல்
கனத்துக்கிடக்கிறது மனம்.

மரத்தின் கீழ்
மௌனித்துக் கிடந்தாலும்
புத்தனைப்போல்
ஞானம் கிடைப்பதரிது.

அடுத்து
எந்த இலை உதிரும்
எனத் தெரியாமல்
வார்த்தைகள்
முணுமுணுக்கிற சப்தம்கேட்டும்
பதில் கூறாமல் கடக்கிறது
காற்று
கிளை முறித்து.

ஆசிரியர்
காவனூர். ந.சீனிவாசன்

கைபேசி : 9600898806
aruvisrinivasan@gmail.com

'ARUVI' - Tamil Magazine Private Circulation Only TASNA Reg. No.: 304/14/0

# கவிதை துளித்துளி

- பஞ்சுப்பாதம்
செந்நிறத் தசை
பிறந்து விழுந்த
பறவைக்கூட்டில்
நிறைய உண்டு
கூர் கம்பி
கூர் முள்
நெகிழிக்கயிறு
பிறவுயிர்கள்
கரணம் தப்பினால்
மரணம்.
அதில் பயின்றபின்தான்
அதற்கு
வானம் சொந்தம்.
- சூ.சிவராமன்.

- தன் குஞ்சுகளுக்கு
இரை கிடைத்த
மகிழ்ச்சியில்
அமர்ந்த பறவை
கவனிக்க மறந்தது
வேட்டைக்காரனின்
துப்பாக்கியை.
- ரேவதி மணி.

- மொட்டை மாடியின்
படிக்கடியில்
செஞ்சதைக்குள் குத்தியவாறு
சிதறிக்கிடந்த இறகுகள்
தடுத்துவிட்டன
பூனையை பற்றிய
மென்கவிதை
புனையப்போவதை.
- மகிவனி.

Editor : Kavanur Na. SRINIVASAN
Published : Smt. N. Buvaneswari Srinivasan, M.A.,M.Phil.,
Laser Typesetting : D. Kotteswaran, GUGAN PRINTERS, Kanchipuram.
For all Contacts : 14, Nehru Bazaar, THIMIRI - 632 512. Vellore Dist.